

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி - ஆவணி - 2024 - செப்டம்பர்| இணைய வழி - மலர் - 2 - இதழ் - 1

காசி விஸ்வநாதர் கோவில் வரலாற்றில் முதல்முறையாக கோகுலாஷ்டமி அன்று பாலகிருஷ்ணருக்கும் விஸ்வநாதருக்கும் ஒரே நேரத்தில் நடைபெற்ற மங்கள ஆரத்தி பூஜை.

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – ஆவணி

2024–செப்டம்பர்

இணையவழி மலர் 2 – இதழ் 1

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்


## பொருளடக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

மக்கள் சமுதாயத்தின் வளர்ச்சிக்கும், அமைதிக்கும் துணையாக அமைவன திருக்கோவில்கள் ஆகும். கோவில்கள் மக்கள் குறைதீர் மையங்களாக, நோய் தீர்க்கும் மருத்துவமனைகளாக, கல்வி வழங்கும் பல்கலைக்கழகங்களாக, எளியோர்க்கு ஆடை, அன்னம் வழங்கும் கொடை நிலையங்களாக, அனைவருக்கும் அருள் தரும் மையங்களாக மக்களுக்கு நன்மை செய்து வருகின்றன. ஓரிடத்தில் மக்கள் நலமுடன் வாழ்கின்றனர் என்றால் அங்குக் கோவில்களின் நிலை சிறப்பாக இருக்கிறது என்று பொருள். அவ்வகையில் கோவில் பணிகளை மக்கள் சிறப்புடன் செய்யவேண்டும். கோவில்களுடன் நெருங்கிய தொடர்புடைய தாக மக்கள் சமுதாயம் விளங்கவேண்டும். இந்த நோக்கத்தை வெற்றி பெறச் செய்வதற்காக திருப்பதியில் எதிர்வரும் டிசம்பர் மாதத்தில் இந்திய அளவில் கோயில்களுக்கான இணைப்பு மாநாடு (‘‘டெம்பின் கனெக்ட்’’) நடைபெற உள்ளது. இவ்வமைப்பு சென்ற ஆண்டு காசியில் நடத்திய நிகழ்ச்சியில் யாம் கலந்து கொள்ள அழைக்கப்பட்டோம். அப்போது இந்திய அளவிலான கோயில்கள் குறித்த பல செய்திகள், பல முன்மாதிரிகளை அறிந்து கொள்ள முடிந்தது. இவ்வமைப்பு இவ்வாண்டு நடத்தும் மாநட்டிற்கும் நாம் அழைக்கப்பெற்றுள்ளோம்.

திருப்பதியில் நடைபெறும் இம்மாநாட்டில் நம்மோடு பலரும் கலந்து கொள்ள வாய்ப்பினை அவ்வமைப்பு வழங்கியுள்ளது. இதன் காரணமாக நகரத்தார்களின் ஒன்பது நகரக் கோவில்களின் நிர்வாகிகள், எழுபத்து நான்கு ஊர் நகரச் சிவன்கோவில் நிர்வாகிகள் ஒரு கோயிலுக்கு இருவர் வீதம் கலந்து கொள்ள வாய்ப்பு வழங்கப் பெற்றுள்ளது. இவர்கள் தங்களுக்கான போக்குவரத்துச் செலவினை மட்டும் ஏற்பாடு செய்து கொண்டால் மாநாட்டு நாளுக்கான தங்குமிடம், உணவு ஆகியனவற்றை மாநாட்டு ஏற்பாட்டாளர்கள் வழங்குவார்கள். இவ்வாய்ப்பினை நகரத்தார்கள் பெற்று

இம்மநாட்டில் கலந்து கொள்வதற்கான ஏற்பாட்டுக் கூட்டம் கோவிலூரில் 149 2023 அன்று நடைபெற்றது. இதற்கான அழைப்பு அனைத்து கோவில் நிர்வாகத்திற்கும் நேரில் சென்று வழங்கப்பட்டது. இக்கூட்டத்தில் பல நகரக் கோயில்களின் நிர்வாகிகள் கலந்து கொண்டனர். மேற்படி மாநாட்டில் கலந்து கொள்ள விருப்பமும் தெரிவித்தனர். கலந்து கொள்ள இயலாதவர்கள் கோவிலூர் மடாலயத்தைத் தொடர்பு கொண்டு மேலும் விபரங்களைப் பெறலாம்.

இம்மாநாட்டில் கலந்து கொள்வதால் நகரக் கோயில்கள் இந்திய அளவில் கவனம் பெறும். இவற்றின் நிர்வாக, கட்டட, அருள் சிறப்புகள் உலகிற்குத் தெரியவரும். நகரத்தார் கோயில்கள் பற்றிய கையேடும் உருவாக்கப்பட்டு மாநாட்டில் வழங்கப்படவும் எண்ணம் கொண்டுள்ளோம். எனவே இதில் கலந்து கொள்ள அனைத்து நகரத்தார் ஊர் பெருமக்களை அன்புடன் அழைக்கிறோம்.

இதே கூட்டத்தில் நகரத்தார் இன வளர்ச்சி குறித்தும் விவாதிக்கப்பெற்றது. குறிப்பாக கல்யாணத்திற்குக் கோயில் மாலை பெறுவது குறித்து நிர்வாகத்தார் எதிர் கொள்ளும் சவால்கள் பற்றியும் விவாதிக்கப்பெற்றது. ஒன்பது நகரக் கோயில்களிலும் திருமணத்திற்கு மாலை பெறும் நடைமுறை ஒரே முறையில் மேற்கொள்ள வேண்டும். மேலும் கோயில் மாலை பெறுவதற்கான விண்ணப்பம் ஏறக்குறைய பாஸ்போர்ட் விண்ணப்பம் போல் ஆன்லைனில் பதிவு செய்வது போல் அமைய வேண்டும். நகரக் கோயில்களின் இணைய தளத்தில் இவ்விண்ணப்பப் படிவம் எளிதில் பூர்த்தி செய்யும்படி உருவாக்கப்பட வேண்டும். இதில் இதுவரை பதிவு செய்த திருமணத்தகவல்கள் அதாவது கல்யாண மாலை பெற்றவர்களின் விபரங்கள் தலைமுறை தலைமுறையாக பதிவு செய்யப்படும். இதன் காரணமாக தற்போது கோயில்மாலைக்கு விண்ணப்பிக்கும் மணமக்களின் பெற்றோர்க்கு கோயில் மாலை அனுப்பப் பெற்ற தகவல் எளிதில் கிடைக்கும். இதனடிப்படையில் ஒவ்வொரு கோயிலுக்கும் ஒவ்வொரு ஊருக்கும் நியமிக்கப் பெற்ற பொறுப்பாளர் கையொப்பம் , பரிந்துரையின் அடிப்படையில் கோயில் மாலை வழங்குவது எளிதாக அமையும். மேலும் மாப்பிள்ளை விண்ணப்பிக்கும் கோயில் மாலை விண்ணப்பம் அக்கோ யிலால் தடையின்மைச் சான்று தரப்பெற்று உறுதி செய்யப்படும். இந்தச் சான்று பெண் வீட்டார் கோயிலுக்கும் செல்லும். அதுபோலவே பெண் வீட்டார் தடையின்மைச் சான்று மாப்பிள்ளை வீட்டாரை வந்தடையும். இத்தகவல்கள் அனைத்தும் ஒவ்வொரு நகரக் கோ யில்களின் உரிமையாகவும், காப்பாகவும் கருதப்படும். அயல்நாடுகளில் திருமணம் செய்வோர்,, சில சூழல் காரணமாக இரண்டாம் திருமணம் செய்து கொள்வோர் இவர்களுக்கான கோயில் மாலைகளுக்கும் உரிய முறையில் தீர்வு செய்யப்படும்.

இவ்வகையில் கணினியில் ஏற்றம் செய்யும் முயற்சியை இளையாற்றங்குடி, வைரவன் கோயில் நகரக் கோயில் நிர்வாகத்தார் முயன்று வருகிறார்கள். இவர்களின் மென்பொருளை அனைத்து நகரக் கோயில்களும் பின்பற்றலாம்.

வேண்டும் இடங்களில் மாற்றிக் கொள்ளலாம். கோயில் நிர்வாகத்தின் பொறுப்பில் உள்ள ஏறக்குறைய ஐம்பது வருட கோயில் மாலை பெற்றவர் விபரங்கள் கணினிக்குள் கொண்டு சென்று அவை தேடும் நிலையில் கிடைப்பனவாக இருக்க வேண்டும். இதற்குக் கோவிலூர் ஆதீனம் உதவி செய்ய முன்வருகிறது. நகரக் கோயில்கள் தங்கள் தகவல்களை கணினியில் ஏற்ற கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் கணினி அறிவியல் துறை கணினிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதற்கு பதிவு செய்ய உரிய கணினிப் பணியாளர்களுக்கு (குறைந்தது ஐந்து பேருக்கு) உரிய ஏறக்குறை மூன்றுமாத ஊதியத்தை ஒவ்வொரு நகரக் கோயிலும் தருவது மட்டுமே செலவு. தங்களின் தகவல்களைத் தாங்களே நாள்தோறும் கணினியாக்கம் செய்ய எடுத்துத் தந்து பின் அவர்களின் கோயிலுக்குக் கொண்டு போகலாம். இப்பணிகளில் கோவிலூர் ஆதீனம் உதவி செய்யுமே தவிர வேறு எப்பொறுப்பையும் ஏற்காது.

இவ்வாறு கணினியாக்கம் செய்யும் பணி தை ஒன்றாம் நாளுக்கு முன்னதாக முடிவு பெற்று தை ஒன்று அன்று ஒரே மாதிரியான முறை கோயில் மாலை பெறுவதில் ஏற்படுத்தப்பட வேண்டும் என்பது நம் அவா.

இதனோடு நகரத்தார் புள்ளி விபரங்களும் சரி செய்யப் பட வேண்டும் ஒவ்வொரு ஊரில் உள்ள நகரத்தார் புள்ளி விபரம் துல்லியமாக அமையவேண்டும். எனவே பிறப்பு, திருமணம், இறப்பு, மணமுறிவு, உதவித் தகவல்கள் ஆகியனவற்றைப் பதிவு செய்யும் பணிகளையும் ஒன்பது நகரக் கோயில்கள் செய்தால் இதன்வழி பல நன்மைகள் கிடைக்கும். மாப்பிள்ளை தேடுதல், பெண் தேடுதல், மருத்துவ உதவி, கல்வி உதவி, திருமண உதவி, முதியோர்க்கு உணவு உதவி, உறையுள் உதவி போன்றனவற்றை வழங்கும் மையங்களாக நமது நகரக் கோயில்கள் அமைந்துவிடும். எனவே நகரத்தார்கள் அனைவரும் இப்பணிக்கு ஒத்துழைப்பு நல்க இக்கூட்டத்தில் கேட்டுக் கொள்ளப்பெற்றது.

இக்கூட்டத்தில் வைரவன் கோயில், இளையாத்தங்குடிக் கோயில், இரணிக் கோயில், மாத்தூர் கோயில் நிர்வாகிகள் கலந்து கொண்டனர். இன்னும் பிற ஊர்களின் காரியக்கார்களும் கலந்து கொண்டு இம்முடிவிற்கு ஒப்புதல் தெரிவித்தனர். இது குறித்த கருத்துகளைக் கோவிலூர் ஆதினத்திற்கு முறையாக வழங்கலாம் என்றும் வேண்டுகோள் வைக்கப்படுகிறது.

இக்கூட்டத்தில் திருவாசகமணி திரு சொ. சொ. மீ சுந்தரம் அவர்கள் கலந்து கொண்டு மேற்காண் பணிகளின் அவசியத்தைப் பற்றிப் பேசினார். மேலும் அரிமழம் திரு முத்துக்குமார் (டி.எஸ்.பி) அவர்களும் கலந்து கொண்டு ஆலோசனைகளை வழங்கினார். இளையாற்றங்குடி நகரக் கோயில் நிர்வாகத்தினைச் சார்ந்த திரு இலட்சுமணன் தம் கோயில் சார்பில் தாயாரிக்கப் பெற்ற மென் பொருள் கறித்தும் அறிவித்தார். இவ்வாறு அடுத்த கட்ட திட்டமிடலுக்குக் கோவிலூர் ஆதீனம் சில செயல்பாடுகளை முன்னெடுத்துள்ளது. இதனை நகரத்தார்கள் அனைவரும் ஏற்றுப் பயன் பெற வேண்டும். இறையருள் துணை நிற்கட்டும்.

## கோவிலூரின் கதை - 9

# சீர் வளர் சீர்
# இரநாத ஞான தேசிக சுவாமிகள் வரலாறு




சீர் வளர் சீர்
இராமநாத ஞான
தேசிக சுவாமிகள்
வரலாறு
(9ம் பட்டம்)



**- முனைவர் மு.பழனியப்பன்**
**தமிழ்த்துறைத் தலைவர்,**
**அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,**
**திருவாடானை**

நாட்டரசன் கோட்டையில் பிறந்து காரைக்குடிக்குப் பிள்ளையாக வந்தவர் கோவிலூரின் ஒன்பதாம் பட்டமாக விளங்கிய சீர் வளர் சீர் இராமநாத சுவாமிகள். இவர் நாட்டரசன்கோட்டையில் வாழ்ந்த திரு. வேலாயுதஞ் செட்டியார், திருமதி முத்துக்கருப்பி ஆச்சிக்கு ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எட்டாம் ஆண்டில் பிறந்தார்.இவரின் இயற்பெயர் கறுப்பையா என்பதாகும். இவர் தொடக்கக்கல்வியை நாட்டரசன்கோட்டையில் இருந்த

சிதம்பர வாத்தியார் திண்ணைப் பள்ளி, கம்பர் கலாசாலை ஆகியவற்றில் கற்றார். தன் இளம் வயதில் நாள்தோறும் அருள்மிகு கண்ணாத்தாள் கோயிலுக்குச் சென்று அங்குள்ள பிள்ளையாருக்கு எண்ணெயும் பூவும் வைத்து வழிபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அதன்பின்பே இவர் பள்ளிக்குச் செல்வது வழக்கம்.

தனது பத்தாம் வயதில் இவர் காரைக்குடி வீ. சித. ராம. சித வீட்டிற்கு குலம் தழைக்க தத்துப் பிள்ளையாக வந்து சேர்ந்து இராமநாதன் என்ற பெயரைப் பெற்றார். காரைக்குடியில் ரெங்க வாத்தியார் பள்ளி, இந்து மதாபிமான சங்கத்தின் இராமகிருஷ்ண கலாசாலை ஆகியவற்றில் கல்வி கற்றார். அக்காலத்தில் இவரின் நண்பர்களாக விளங்கியவர் கம்பன் அடிப்பொடி சா. கணேசன், அ. தெ. மு.மு. அருணாசலம் போன்றோர் ஆவர். திரு. சொ. முருகப்பனாருடனும் இவருக்கு நட்பு வளர்ந்தது. அந்நாளில் இவர்களுக்கு குமரன் கோஷ்டி என்ற பெயர் வழங்கி வந்துள்ளது.

இவர் அக்காலத்தில் இந்துமதாபிமான சங்கம், காரைச் சிவன் அடியார் திருக்கூட்டம், தன வைசிய ஊழியர் சங்கம் போன்றவற்றில் அங்கம் வகித்துள்ளார். கல்வி கற்றபின்பு பர்மாவிற்குத் தொழில் செய்யச் சென்றார். தொழில் விருப்பம் ஓரளவு நிறைவேறிய நிலையில் தாயகம் திரும்பி ஞானத் தேடலில் ஈடுபட்டார்.

பல ஊர்களில் இத்தேடல் நிகழ்ந்தது. மன்னார்குடியில் ச.து.சு. யோகியார் என்பவரின் இல்லத்தில் இவர் தங்கியபோது ஆசிரம வாழ்க்கை இவருக்கு நிறைவைத் தருவதாக உணர்ந்தார். ஆசிரம வாழ்க்கை மேற்கொள்ள இவரின் மனம் விரும்பியது.

## திருப்பம் தந்த திருப்பராய்த்துறைப் பயணம்

ஒருமுறை திருப்பராய்த்துறைக்கு இவர் செல்லும் வாய்ப்பு அமைந்தது. இராமகிருஷ்ண தபோவனத்திற்குச் சென்று அங்கு ஸ்ரீமத் சித்பவானந்த சுவாமிகளின் அருளாசியைப் பெற்றார். அங்கு இருந்த விவேகானந்தர் படம் இவரைப் பெரிதும் ஈர்த்தது. அப்படத்தைத் தனக்காக வாங்கி வந்து அவரின் வாழ்க்கை போன்று தன் வாழ்வும் அமைய வேண்டும் என்று விரும்பினார். இதே நேரத்தில் இராஜாஜி எழுதிய கடோப உபநிஷம் இவருக்குப் படிக்கக் கிடைத்தது. இந்நூல் இவரின் ஞானவாழ்க்கைக்குத் தொடக்கமாக அமைந்தது.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து மூன்றாம் ஆண்டு இவர் சூட்டுக்கோல் இராமலிங்க சுவாமிகள் ஆலயத்தில் துறவறம் மேற்கொண்டு துறவாடை பெற்றார். இதன்பின் தல யாத்திரை மேற்கொண்டார். திருப்பதி இவருக்கு விருப்பான தலம். பலமுறை அங்கு சென்று அங்கப் பிரதட்சணம் செய்து பெருமாளைத் தரசித்து வந்தார்.

கோவிலூர் மடத்தின் ஆதி மூலமான பொருள்வைத்த சேரி மடத்தில் தங்கி ஞானம் தேடும் பணியில் இறங்கினார். இதனைத் தொடர்ந்து திருவண்ணாமலை ஈசானிய மடத்தினை நடத்திச் செல்ல இவருக்கு வழி காட்டப்பெற்றது. அப்போது தன்னுடன் விவேகானந்தர் உருவப்படத்தையும் எடுத்துச் சென்று வழிபட்டு வந்தார். இன்றும் ஈசானிய மடத்தில் அப்படம் ஞானவழி காட்டிக் கொண்டு இருக்கிறது.

## ஈசானியமே ஈசன் இருப்பிடம்

திருவண்ணாமலையில் ஈசானிய மடத்தின் பொறுப்புகளுடன், சேவாஸ்ரமம் ஒன்றையும் தொடங்கி ஏழை மாணவர்கள் கல்வி சிறக்கப்

பாடுபட்டார். இது சிறிது காலத்தில் உயர் தொடக்கப்பள்ளியானது. திருவண்ணாமலையில் ஓடாது நின்ற அம்மன் தேர் இவரின் முயற்சியால் சீர்பெற்றது. ஓடியது. அருணகிரிநாதரின் தலமான திருவண்ணாமலையில் அவருக்குச் சிறப்பான விழா ஆண்டுதோறும் எடுக்க இவரே முன்னவராக இருந்தார். அவ்விழா சிறப்புடன் இன்றும் நடைபெற்றுவருகிறது.

இவர் நூல் எழுதும் ஆற்றலும் மிக்கவர். திருவண்ணாமலை தல வரலாறு என்ற நூலை இவர் எழுதி வெளியிட்டுள்ளார். நூலகம் ஒன்றை ஈசானிய மடத்தில் வைத்திருந்தார். இவரின் நூல் சேகரிப்புகள் தற்போது கோவிலூர் மின் நூலகத்தை அலங்கரித்து வருகின்றன. அருணாசல புராணத்தை இராய. சொக்கலிங்கனார் குறிப்புரையுடன் வெளிவர இவர் உதவினார்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்து ஆறாம் ஆண்டு திருவண்ணாமலையில் திருக்குடமுழுக்கு விழா நடத்தப்பட்டது. அக்காலத்தில் இவர் அவ்விழாவிற்குப் பெருந்துணை புரிந்தார். மேலும் மலர் ஒன்றையும் தயாரித்து இவர் வெளி யிட்டார்.

இவர் திருச்சி சுவாமிகளுடன் இரண்டற ஒன்று கலந்து பழகிய பண்புடையவர். திருத்தணி முருகன் இவருக்குத் தொடர்வண்டி ஊழியராக வடிவெடுத்து உதவிய நிகழ்வும் நடந்துள்ளது.

### ஒன்பதாம் மடாதிபதியாக

அருள்பணியும், கல்விப் பணியும் ஆற்றிவந்த இவர் கோவிலூர் மடத்தின் மடாதிபதியாக ஆயிரத்துத் தொள்ளா யிரத்து எழுபத்தொன்றாம் ஆண்டில் பொறுப்பேற்றார். சீர் வளர் சீர் இராமநாத ஞான தேசிகராக இவர் கோவிலூர் மடத்தின் அருளாட்சியை ஏற்றார்.

மடத்தின் பொறுப்பினைக் கவனிக்க ஆண்டவர் மன்றம் ஏற்படுத்தப்பெற்றது. இது தலைவர், செயலர், துணைச் செயலர், துணைத் தலைவர் போன்ற பொறுப்புகளைக் கொண்ட பொறுப்புக் குழுவாக இயங்கியது. மேலும் கோவிலூர் மடத்தின் ஆவணங்களைச் சரிசெய்து தொகுத்த பணியும் இவர் காலத்தில் நடந்த முக்கியமான பணியாகும். மேலும் கிளைமடங்களையும் இவர் ஒழுங்குபடுத்தி பல புதிய கட்டடங்களை, வசதிகளை ஏற்படுத்தினார்.

புயலில் உருத்தெரியாமல் ஆகி யிருந்த கோவிலூரின் வழிகளில் உள்ள தேர் உருவங்களைப் புதுப்பித்த பெரும்பணியும் இவர்காலத்தில் நடைபெற்றதே ஆகும்.கோட்டையூர் அ.க.அ.சித. அழ. சிதம்பரம் செட்டியார் இதற்காக பெருங்கொடை நல்கினார்.

இதன்பின் திருச்சி சுவாமிகளுடன் கும்பமேளா யாத்திரையை இவர் மேற்கொண்டு காசி முதலான பல இடங்களைத் தரிசித்தார்.

### திருநெல்லை அம்மன் உருத் தோற்றமும் உணர்த்திய செய்தியும்

இவருக்கு அருகாமையில் ஓர் முன்னிரவில் திருநெல்லையம்மன் வருத்தத்துடன் தோன்றி மறைந்தாள். இந்த வருத்தக் குறி அருள்மிகு திருநெல்லை உடனாய கொற்றவாளீசர் கோயிலுக்குக் குடமுழுக்கு நடத்தக் காட்டப்பெற்றதாகும். இதனைச் செயலாற்ற சுவாமிகள் முனைந்து வெற்றி பெற்றார்.

தனது மன உடல் ஓய்விற்காக இளைய பட்டமாக காளையார் கோயில் மடத்தின் பொறுப்பில் இருந்த திரு அரு. இராமநாதன் அவர்களை நியமித்து மடத்துப் பணிகள் சிறக்க இவர் உதவினார்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்து இரண்டாம் ஆண்டில் நிறைவாழ்வு பெற்றார்.

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

## பகுதி-10 தொடர்ச்சி

## பாசப்படலம்

(62 பாடல்கள்)



**முனைவர் சரசுவதி இராமநாதன்,**
பள்ளத்தூர்

இலங்கையைச் சுற்றிப் பார்த்த அனுமன், உறங்கியபோதே அனைவரது ஆற்றலையும் ஊகித்து உணர்ந்தான் என முன்னர் பார்த்தோம். இந்திரசித்தனைப் பார்த்ததும் முருகனோ இவன்! என ஐயப்பட்டான். ஆனால் கருநிறத்து அரக்கன் இவன் ஆனாலும் பெரிய வீரன் இராம இலக்குவர். இவனோடு பல நாள் போர் புரிய வேண்டும் என உணர்ந்தானே அது உண்மை. இப்போது அனுமனே இந்திரசித்தனிடம் போரிட்டு அயன்படையால் கட்டுப்படப் போகிறானே! அது தான் பாசப்படலத்தின் கதைச் சுருக்கம்.

"உதையுண்டன யானை; உருண்டன யானை; ஒன்றோ?
மிதியுண்டன யானை; விழுந்தன யானை; மேல் மேல்,
புதையுண்டன யானை; புரண்டன யானை; போரால்
வதையுண்டன யானை; மறிந்தன யானை, மண்மேல்" (1010)

தேர்கள், குதிரைகள், காலாட் படை வீரர்கள் அவ்வாறே! தனியே நின்று தோள் தட்டிய அனுமன் எதிரே வந்து நின்றான் வீரன், வில்லாளன், இந்தரசித்தன்! தனது கொடிய வில்லின் நாணை இழுத்துப் பேரொளி எழுப்பியவாறு மேகநாதன் (எ) இந்திரசித்தன் வந்தான். தன் தோளாற்றலால் வில்லின் நாணை அறுத்தெறிந்தான் அஞ்சனை புதல்வன்! மேகநாதன் அனுமனே! நீ மிகச் சிறந்த வீரன் தான். ஆனால் உன் ஆயுளுக்கு இன்றே இறுதி என்றான். அனுமன் பதில் தந்தான். "உங்கள் வாழ்நாள், உங்களுக்கு வெற்றி தரும் நல்ல கோள்கள். உங்கள் வாள்கள், ஆற்றல் மிகு தோள்கள் எல்லாம்

போகப் போகின்றன” என்றான்.

இராமனின் புகழைப் போல் ஓங்கி நின்ற அனுமன் உருவை இந்திரசித்து முழுதும் காண முடியாமல் பிரமித்தான். இந்திரசித்து எய்த கொடிய அம்புகள் தன் மேல் படாதபடி அவற்றைப் பிடுங்கி இந்திரசித்தன் மீதே வீசினான் அனுமன்! இந்திரசித்து பெரிய தேர் மீது ஏறி, ஆயுதங்களால் அனுமன் மேனியை மூடினான்! அனுமனோ அவற்றை எளிதில் உதறித் தள்ளி விட்டுத் தேர் மீது ஏறிக் குதித்தான்! இந்திரசித்தனின் கை வில்லை வலிய கையால் பற்றி முறித்துப் போட்டான்! போர் என்றால் இதுவல்லவா போர் எனும் படி அமைந்தது.

மேகநாதனோ இந்திரன் களத்தில் போட்டு விட்டு ஓடிய அந்த வில்லை எடுத்துக் கொண்டான். அனுமனே தளர்ந்து போகுமாறு அம்பினை செலுத்தினான். தேவர்கள் கலங்கினர். சற்றுத் தெளிந்ததும் வழக்கம் போல் பெரிய மரத்தைத் தன் வலிய கரத்தில் எடுத்து, இந்திரசித்தனின் அம்புகளைத் தடுத்தான். அதே மரத்தால் இந்திரசித்தனின் தலையில் ஓங்கி அடிக்க உதிரம் பெருகச் செயலற்று நின்றான். அனுமன் சினத்தோடு அரக்கனின் தேரை வானத்தில் வீசி எறிந்தான். தேவர்கள் ஆரவாரம் செய்தனர்.

### மண்ணில் விழுந்தான் மாவீரன்

தேரோடு வானில் சென்று மீண்டும் இரத்த வெள்ளத்தில்

நிலத்தின் மீது விழுந்தான் மாவீரன் இந்திரசித்தன். வேறு வழியறியாது பிரம்மாத்திரத்தை விட முடிவு செய்தான். மானசிக வழிபாடுகள் செய்தான் (மலர் தூவுதல், தூப தீபம் காட்டல் நிவேதனம் செய்தல் எல்லாம், மனதால் செய்தான்) அயன் படையைத் துதித்துக் கையில் எடுத்தான்.

## பிரம்மாத்திரம்

நீண்ட நாணொடு கூடிய வில்லில் பிரம்மாத்திரத்தைக் கோர்த்து அனுமனது தோளைக் குறிவைத்து, "மண் துளங்கிட, மாதிரம் துளங்கிட, மதிதோய் விண் துளங்கிட, மேருவும் துளங்கிட விட்டான். "பிரம்மாத்திரம், நெருப்பைக் கக்கும் விழியுடைய பாம்பரசன் வடிவுடன் அனுமன் தோள்களை இறுக்கிக் கட்டியது கருடனும் நடுங்கிவிட்டான். அறக்கடவுள் கண்ணீர் சிந்தினார். தனது வலிமை மிக்க உடலை, பிரம்மாத்திரம் கட்டிவிட, அனுமன் அதை உணர்ந்தவாறே கீழே சாய்ந்தான். அந்தத் தெய்வீக சாஸ்திரத்தின் வலிமைக்குக் கட்டுப்பட்டுக் கண் மூடி இருந்தான். "குரங்கின் வலிமை குறைந்தது" என மகிழ்ந்த மேகநாதன் அருகில் வந்தான்.

அரக்கர் பலரும் அச்சம் நீங்கி, அனுமன் பக்கம் வந்து பாம்பைப் பற்றி இழுத்தனர். ஆரவாரம் செய்தனர். ஆனந்தம் கொண்டு ஆர்ப்பரித்தனர். பிரம்மாத்திரமான பாம்பு வாசுகி போலவும், அனுமன் மந்திரமலை போலவும், இழுத்த அரக்கர்கள் பாற்கடலைக் கடந்த அமரர்கள் போலவும் தென்பட்டனர். இந்திரனைக் கைது செய்து கட்டி வந்த நாளில் அரக்கர்கள் எத்தனை மகிழ்ச்சியடைந்தனரோ, அத்தகைய மகிழ்ச்சியில் ஆரவாரம் செய்தனர்.

## பிணிவீட்டுபடலம்

ஒரு நல்லவன் சந்தர்ப்ப வசத்தால் விழுந்து விட்டால், அவனை வீழ்த்திய கெட்டவர் ஆரவாரம் செய்து மகிழ்வது உலகியல் தானே! தங்கள் அரக்கர் கூட்டத்தை அழித்த குரங்கு பிரம்மாத்திரத்தால் விழுந்தது கண்ட அரக்கர் கொண்ட ஆனந்தம் சொல்லும் தரமன்று! "இந்தக் குரங்கை வாளால் வெட்டுங்கள். கோடாலியால் பிளந்து போடுங்கள். ஈட்டியால் குத்துங்கள். இதன் குடலை உருவுங்கள். தசையைப் பியித்துக் தின்னுங்கள்!" என்ற சத்தம் அண்டமெல்லாம் எதிரொலித்தது.

மையிட்ட கண்ணினரான அரக்கியரோ இத்தனை நாள் இக்குரங்கை விட்டு வைத்ததே தவறு என அவரவர் வந்து குத்தினர். 'எம் தந்தையை, சகோதரரை, நாயகனை எல்லாம் கொன்ற நீ இனி உயிரோடு இருப்பதா! என்று கதறி அழுதனர். அடேய் உன் தலை மீது நின்று தானடா எங்கள் மங்கல நாணை அறுப்போம் என்று கூக்குரலிட்டனர். அனுமனைப் பிடித்துக் கட்டிவிட்ட பெருமிதத்துடன் இந்திரசித்தன் முன்னே செல்ல, அரக்கர் கூட்டம் அனுமனை இழுத்துச் செல்ல, ஊரை நன்றாகப் பார்த்தவாறே அனுமன் சென்றான். உள்ளுக்குள்ளே வருந்திய தேவர்கள் செயலற்று நின்றனர். எமன் தன் வடிவத்தை மாற்றிக் கொண்டு அரக்கரை அழிக்க வந்த வடிவம் தான் இக்குரங்கோ!

எனச் சிலர் அச்சத்தால் மௌனமாயிருந்தனர்.

"அறம் வலிமையற்றுப் போனதோ சீதை துயர் தீர வழியில்லையோ!" எனச் சில தேவர் கண்ணீர் சொரிந்தனர். அனுமனோ "இப்படியே கட்டுப்பட்ட மாதிரி இவர்கள் பின்னே செல்வது நல்லது. இலங்கை வேந்தன் இராவணனைக் காண்பதும் ஒரு வாய்ப்பாகும்" எனக் கருதி அமைதியாகச் சென்றான். தேவர்கள் தந்த வரம், இராமனின் அருள் சீதாதேவி தந்த (சிரஞ்சீவித்துவம்) வரம் எல்லாம் உள்ளன. இக்கட்டுகளை அறுத்தெறிய முடியும். ஆனாலும் தசமுகனுக்குச் சில அறிவுரைகளைச் சொல்ல நான் அவனைப் பார்த்தாக வேண்டும்.

"வாலிதன் இறுதியும், மரத்துக்கு உற்றதும்,
கூல வெஞ் சேனையின் குணிப்பு இலாமையும்,

சூரியன் புதல்வனின் வலிமையும் எல்லாம் அரக்கர்கள் அறியச் சொல்வேன். ஒருவேளை மனம் திருந்தியவனாக இராவணன் சீதையை விட்டுவிடக் கூடும். கேட்காவிட்டால் மீதி சேனையை அழித்து விட்டுத் திரும்பிப் போவேன்! என்றெல்லாம் தன் மனதில் எண்ணியவாறு அனுமன் சென்றான்.

பெரியபடை நாற்புறமும் சூழ்ந்து வர, கட்டுண்ட காளை போல அனுமன், நடுவில் வந்தான். தூதர்கள் மகிழ்ச்சியுடன் "வேந்தே! உன் மகன் போட்ட பிரம்மாத்திரம் அனுமனைக் கட்டிவிட்டது என்றனர். தூதுவர்களுக்குப் பரிசளித்தான் தசகண்டன். அந்தக் குரங்கைக் கொன்று விடாமல் என் முன் உயிரோடு கொண்டு வரச் சொல்லுங்கள்! என்றான்.

சீதை கலங்கினாள்

அனுமனுக்கு உற்ற துயரை, வீடணன் மகள் திரிசடை சீதையிடம் கூறினாள். பாவிவேடன் கைப்பார்ப்பு உறப்பேதுறும் தூவி அன்னம் அன்னாள்!" துடித்தாள். அஞ்சி கலங்கினாள்! ஆகாயம் அளவு வளர்ந்து நின்றாய்! சித்திகள் பெற்றவன் நீ! வஞ்சக அரக்கனால் கட்டுண்டாயே! அறத்தின் தன்மை இது தானா? நல்ல வேளை, அரக்கர் கடலைக் கலக்கிய நீ உயிரை இழக்கவில்லை என்பதே போதும்!

"ஆழி காட்டி, என் ஆர் உயிர் காட்டினாய்க்கு,
"ஊழி காட்டுவேன்" என்று உரைத்தேன்; அது
வாழி காட்டும் என்று உண்டு; உன் வரைப் புயப்
பாழி காட்டி, அரும் பழி காட்டினாய்!" (1078)

எனக்கு இராமனின் கணையாழி தந்து உயிர் தந்த உத்தமனே! நீ ஊழி தோறும் உலவாமல் வாழ்வாய் என வாழ்த்தினேன். ஆனால் நீயோ கட்டுப்பட்டாயே! நிச்சயம் என் வாழ்த்து பலிக்கும். நீ அழியமாட்டாய்! என்றெல்லாம் புலம்பித் தவித்தாள்!.

(தொடரும்)

## சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 7

## நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்

இயற்கையோடு ஒன்றி வாழ்ந்த தொல்தமிழர் வாழ்வில், திணைக்குரிய கடவுளர் தத்தம் நிலம்சார்ந்த கருப்பொருட்களோடு வணங்கப்பட்டனர். சங்க இலக்கியங்களின் அகண்ட நிழலில் நின்று நோக்கின், அக்காலத்திற்கும் முந்தைய தமிழர் தொன்மங்களை மேலும் புரிந்துணரவியலும். பண்டைத் தமிழர் அகவாழ்விலும் புறவாழ்விலும் பின்னிப்பிணைந்த முருகன் என்ற முன்னோன் குறித்த நம்பிக்கை மற்றும் சடங்குகள், காலந்தோறும் பெற்ற மாற்றங்களைத் தமிழிலக்கியங்களே விளக்கவல்லன.

‘சேயோன் மேய மைவரை உலகம்’ என்று தொல்காப்பியம் மலையும் மலை சார்ந்த நிலத்தலைவனாக முருகனைக் குறிக்கும். சங்கப் புலவர்கள், முருகன் யாரென்று தெளிவுறப் படம்பிடித்துக் காட்டுகிறார்கள். மன்றத்திலிருந்த வேங்கை மலர்களைக் கொணர்ந்து தன் குலத்தின் தொல்தெய்வமான மலைக்கடவுளைத் தலைவி வணங்கியதை ஐங்குறுநூற்றில் காட்டும் கபிலர் (259), குறுந்தொகையில் (87) மன்றத்திலுள்ள கடம்ப மரத்தில் ‘பேஎ முதிர்க்கடவுள்’ இருப்பதைத் தலைவி கூற்றாக அமைக்கிறார்.



**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com,
www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி

மலைக்கடவுள் முருகனைச் சங்க காலத்தவர் எப்படியெல்லாம் வழிபட்டார்கள்? செந்தினையை நீர்த்தெளித்துப்

படைத்தார்கள்; ஆரவாரிக்கும் அருவியைப் போன்றொலிக்கும் பல்வகைக் கருவிகளிசைத்து அவனுடைய கடம்ப மரத்தையும் களிற்றையும் பாடினார்கள்; அவித்த அரிசியைப் படைத்து ஆட்டுக்குட்டியைப் பலியிட்டும் வணங்கினார்கள். குன்றக் குறவனோ தன் கடவுளை வேண்டி, ‘எல்வளைக் குறுமகளைப்’ பெற்றெடுக்கிறான்.

முருகன் கைப்பிடித்த வள்ளியையும் சங்கப்பாடல்கள் குறிக்கத் தவறவில்லை. நற்றிணைத் தலைவன் (82) தலைவி யிடம், “முருகனோடிணைந்த வள்ளிபோல நீ என்னுடன் இணைவாயா?” என்று ஏக்கத்துடன் கேட்கிறான்.

அகமே மையப்பொருளான குறுந்தொகையின் முதல் பாடலில், சேயோனான முருகனின் காட்சிக் களமே சிவப்பில் தோய்ந்திருக்கிறது

செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த
செங்கோல் அம்பின் செங்கோட்டு யானை
கழற்றொடி சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக் காந்தட்டே!
(திப்புத்தோளார், குறுந்தொகை 1)

குருதிப்புனல் பாய்ந்தோடும் சிவந்த போர்க்களத்தில் அவுணரையழித்த அம்பும் யானையின் கோடும் குருதிபடிந்து சிவந்திருக்க, தொடியணிந்த சிவந்த நிறத்தினனான முருகனின் குன்றத்தில், குருதிநிறத்த காந்தள் பூக்கள் கொத்துக் கொத்தாகப் பூத்துக் குலுங்கின. இது புறப்பாடலா என்று ஐயுறும் வேளையில், “வீரமும் போர்த்திறமும் நிறைந்த முருகனின் நிலத்தில் செங்குருதிக் காந்தள் நிரம்பக் கிடக்கிறது. அதனால் தலைவிக்குக் கையுறையாக நீ கொணரும் காந்தள் பூக்கள் எமக்குத் தேவையில்லை,” என்று தலைவனிடம் கூறி நுட்பமாகச் சிரிக்கிறாள் தோழி.

புறப்பாடல்களிலோ, முருகனின் வீரத்தையே அளவுகோலாகக் கொண்டு புலவர்கள் அரசரை வாழ்த்துகின்றனர். குமட்டூர்க் கண்ணனாரின் பதிற்றுப்பத்துப் பாடல் (11), மாக்கடலில் ஒளிந்திருந்த சூரனை வென்று வெற்றி முழக்கத்துடன் தன் களிற்றின்மேல் வெற்றியுலா வந்த முருகனைப்போல் மாலைகளும் அணிகளும் தாங்கி, வெற்றிதரும் மருப்புடைய (மருப்பு தந்தம்) குறையில்லா யானையின்மேல் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் உலா வருவதைப் போற்றுகிறது.

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரின் புறநானூற்றுப் பாடல்(56), பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ் சிய நன்மாறனை நாற்பெரும் கடவுளரோடு ஒப்பிடுகிறது. தொல்காப்பியர் காட்டும் திணைகள் நான்கினுக்குரிய கடவுளர் புறநானூற்றுக் காலத்துள் சிவன், பலராமன், திருமால், முருகனென்று மாற்றம் பெறுவதையும் காட்டும் பாடலிது. ‘முருகு ஒத்தீயே முன்னியது முடித்தலின்,’ என்று முருகனைப் போல் எடுத்த செயலை முன்னரே முடிக்கும் மன்னரின் சிறப்புப் பண்பைப் பாடுகிறார் புலவர். ‘மணி மயில் உயரிய மாறா வென்றிப் பிணிமுக ஊர்தி ஒண் செய்யோன்,’ ஒளிரும் செய்யோனான முருகன், தோல்வியே அறியாதவன்; மயில் கொடியோடு பிணிமுகத்தை ஊர்தியாகக் கொண்டவன். பிணிமுகத்தைப் பிங்கல நிகண்டு, ‘புட்பொதுப் பெயரு மயிலும் பிணிமுகம்’ என்று மயிலெனவே உரைக்க, யானையென்றும் உரையாசிரியர்கள் சிலர் கூறுவர்.

முருகாற்றுப்படை, புறநானூறு, கலித்தொகை, பரிபாடல் ஆகிய நான்கு இலக்கியங்களைச் சங்ககால எல்லையின் இறுதிக்கட்ட நூல்களென தமிழ் அறிஞர்கள் ஏற்கின்றனர். “இந்நான்கனுள்

புறநானூறும் கலித்தொகையும் சங்கச் சாயலில் தோய்ந்தவை. முருகாற்றுப்படையும் பரிபாடலும் 6ஆம் நூற்றாண்டில் எழுச்சியோடு வெளிப்பட்ட பத்திமை இலக்கியங்களின் முன்னோடிகளாகவும் அதே சமயம் சங்க இழையோட்டத்தில் வடிவமைக்கப்பட்ட இலக்கியங்களாகவும் காட்சிதருகின்றன,'' என்று டாக்டர் இரா. கலைக்கோவன் கூறுவது (பக்கம் 20, இருண்ட காலமா?) முருகன் கண்ணோட்டத்திலும் சிந்திக்கத்தக்கது.

குறிஞ்சி நிலப்பகுதியின் தொன்மைமிகு தலைவனாக அதுவரையில் போற்றப்பட்ட முருகனைப் பரிபாடல் எப்படிக் காட்சிப்படுத்துகிறது?

கடுவன் இளவெயினியாரின் பாடலில் (பரி.5), தமிழகத்து மலைக்கடவுளான முருகன் இமயமலையில் சிவனுக்கும் உமைக்கும் பிறந்ததையும் ஆறுமுகனானதையும் விளக்கமாகக் காணமுடிகிறது. அவன் கை ஆயுதங்களைத் தேவர்கள் வழங்க, அனலன் (அக்கினி தேவன்) சேவலும், இந்திரன் மயிலும், யமன் ஆடும் தந்தனர்.

'மன்ற மராஅத்த பேஎ முதிர்க் கடவுள்' என்ற குறுந்தொகை வரிகள் 'உருள் இணர்க் கடம்பின் ஒலி தாரோயே!' (பரி.5) என்றும் 'கடம்பு அமர் செல்வன்' (பரி. 8) என்றும் தொடரக் காணலாம். ஆனால் ஏழுலகும் ஆளும் முருகன் 'மறு மிடற்று அண்ணற்கு மாசிலோள் தந்த கடம்பமர் செல்வன்' என்ற புதிய அடையாளம் பெறுகிறார் (ஆசிரியர் நல்லந்துவனார், பரி.8).

குன்றம்பூதனாரின் பாடலில் (பரி.9), முருகன் வள்ளியை மணந்த நாளில், 'ஐ இருநூற்று மெய்ந் நயனத்தவன் மகள்' ஆயிரம் கண்களுடைய இந்திரனின் மகளான தேவசேனை மலர்க்கண்களில் கண்ணீர் வடிக்க, அவள் வருத்தம் தணிக்கும் பொருட்டு திருப்பரங்குன்றத்து முகில்கள் மழையைச் சொரிந்தன.

முற்சங்கப் பாடல்கள் காட்டும் குறிஞ்சி நிலத்தின் கருப்பொருட்களான பறவை, விலங்கு, ஊர், பூ, மரம், உணவு போன்ற முறைமைகளைத் தாண்டி, துணைக்கண்டம் முழுமைக்கும் பொருந்தும் கடவுளாக முருகனை இணைக்கும் சமயசமூக மாற்றத்தை இக்காலத்தே காணமுடிகிறது.

பன்னிரு திருமுறைகளில் சேர்க்கப்பட்டிருக்கும் ஒரே சங்ககால இலக்கியமான திருமுருகாற்றுப்படை, தொடக்கத்திலேயே முருகனை 'மறுஇல் கற்பின் வாணுதற் கணவன்' என்று தெய்வயானைக் கணவனாக அறிமுகப்படுத்துகிறது. திருச்சீரலைவாயில் முருகனின் ஆறுமுகங்களைப் போற்றுகை யில்தான் பல நூற்றாண்டுகளாய் முருகனின் மனையாட்டியாகத் தமிழரறிந்த குறிஞ்சி நிலத்துக் குறவர் மகள் வள்ளி வெளிப்படுகிறாள்.

.................................ஒரு முகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே
(100102)

முருகனின் அறுபடை வீட்டைப் பாடும் புலவர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார், குன்றுதோறாடலில் (திருத்தணிகைமலை) கானவரின் குரவைக் கூத்தைக் காட்டுகிறார். அங்கே, சிவந்த நிறத்த முருகன் சிவந்த ஆடையும் கச்சும் கழலுமணிந்து, வெட்சிக் கண்ணிச் சூடி, குழலும் கோட்டும் பல்வேறு இசைக்கருவிகளும் கைக்கொண்டு, மறியும் மயிலும் உடையவனாகச் சேவல் கொடியோனாய், நெடியன் தொடியணிந்த தோளனாக முழவுபோன்ற கைகளைத் தூக்கி ஆடிமகிழ்கிறார்.

பழமுதிர்ச்சோலையிலோ, சங்கப் பண்பாட்டின் தவிர்க்கவியலாச் சாயலை உணரமுடிகிறது. வெறியாட்டக் களத்தில் சேவற்கொடி பறக்க, முருகனுக்கு மலர்கள் சேர்த்த சிறுதினையும் ஆடும் படைத்து வழிபடுகின்றனர். குன்றக் கடவுள் இல்லாத இடமேது? சதுக்கமும் சந்தியும் மட்டுமல்லாமல் புதுப் பூங்கடம்பிலும் இருக்கிறார்.

முருகனைக் கண்டு வழிபடும் அடியவர்
ஆல் கெழு கடவுட் புதல்வ! மால் வரை
மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!
இழை அணி சிறப்பின் பழையோள் குழவி!
வானோர் வணங்கு வில் தானைத் தலைவ!
260

---

அரும் பெறல் மரபின் பெரும் பெயர் முருக! (269)

என்று முருகனைப் போற்றும் வரிகள், பண்டைத் தமிழரின் மண்ணுக்குரிய கடவுளுக்குச் சமய மாற்றத்தால் ஏற்பட்ட இடமாற்றத்தைக் குறிப்பன.

கொற்றவை சிறுவன், பழையோள் குழவி, தானைத் தலைவன், மாற்றோர் கூற்றெனப் போற்றப்படும் ‘தொன் முதிர் மரபின் புகழுடை’ முருகனின் பல்வேறு பரிமாணங்களில், ‘ஆல் கெழு கடவுட் புதல்வனெனும்’ வடிவமே பத்திமைக் கால இலக்கியங்களில் நிலைநிறுத்தப்படுகிறது.

சிவன் முதன்மைத் தெய்வமாக உயர்ந்தோங்கிய ஏழாம் நூற்றாண்டுத் தமிழகத்தில், சிவ வழிபாட்டில் இணைந்த முருகனின் புத்தொளிப் படிமத்தை அப்பரும் சம்பந்தரும் உவந்தளிக்கின்றனர். முக்கட் செல்வரின் பிள்ளையென்று முருகனை முன்னிறுத்துவதைக் காட்டிலும் சிவபெருமானை முருகவேள் தந்தையென்று விதந்தோதுவதே மேம்பட்டு நிற்பதையும் காணமுடிகிறது. இது, முருகன் பண்டைத் தமிழ்நிலத்தின் தொல்முதிர்க் கடவுளெனும் தாக்கத்தைக் காட்டுவதெனவே கொள்ளவேண்டியுள்ளது.

## அப்பர் காட்டும் முருகன்



சோமாஸ்கந்தர், அத்யந்தகாம பல்லவேசுவரகிருகம்

நன்றி: லலிதாராம்

இராஜசிம்மர் கலைப்பட விருந்து (புகைப்படத்தொகுப்பு); வரலாறு.காம்

குறிஞ்சிக் கடவுள் முருகன் குழந்தை ஸ்கந்தனாக மாற்றம்பெற்று, பல்லவர் கொண்டாடிய சோமாஸ்கந்தரெனும் குடும்பப் புகைப்படத்துள் சிறப்பிடமெய்த அப்பர் பாடல்கள் எவ்வகையில் பங்களித்தன?

முருகனுக்குரியவையெனச் சங்கப் பாடல்கள் காட்டும் கடம்ப மரமும் மயிலும் சேவற்கொடியும் முருகனின் அடையாளங்களாக அப்பர் பாடல்களில் சுட்டப்படுகின்றன.

முன்னையார் மயிலூர்தி முருகவேள்

தன்னையார் (05.016.07) என்றும் கோழிக் கொடியோன் தன் தாதை போலும் (06.089.02) என்றும், அனைவருக்கும் முன்னவரான சிவபெருமான் மயிலூர்தியும் கோழிக் கொடியுமுடைய முருகனின் தந்தையென்று குறிப்பிடுகிறார் நாவுக்கரசர்.

ஊர் மன்றத்துக் கடம்ப மரத்தில் முருகன் இருந்ததாகக் கொள்ளப்பட்ட குறிஞ் சிநிலத்து நம்பிக்கைத் தொன்மத்தைச் சொன்ன குறுந்தொகைக் காட்சியையும் அப்பரில் காணலாம்.

உடம்பெனு மனைய கத்து வுள்ளமே தகளி யாக

மடம்படு முணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிம யக்கி

இடம்படு ஞானத் தீயா லெரிகொள விருந்து நோக்கில்

கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே (04.075.04)

என்பவர், கடம்பன் தாதை கருதுங்காட்டுப்பள்ளி உடம்பினார்க்கோர் உறுதுணை யாகுமே (05.084.06) என்று திருக்காட்டுப்பள்ளி இறைவனைப் போற்றுகிறார். கச்சி மேற்றளியிலோ, கடம்பன் றந்தை யிலங்குமேற் றளிய னாரே (04.043.02) என்று மகனைக் கொண்டு தந்தையை வணங்குகிறார்.

பத்திமைக் காலமாயினும் நற்றிணையின் 'முருகு புணர்ந்த வள்ளி'யை மறக்கவியலுமா?

வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய் (06.023.04) என்று திருமறைக்காட்டிலும், குறவிதோண் மணந்த செல்வக் குமரவே டாதையென்று (04.060.03) திருப்பெருவேளூரிலும் வள்ளியை நினைவில்கொண்டு குமரவேள் தந்தையைப் போற்றுகிறார் அப்பர்.

முருகனின் தந்தையாகச் சிவனைப் பாடினாலும், 'மாறா வென்றிச் செய்யோனின்' தோல்வியே காணாத வீரத்திறத்தைக் குறிக்கத்தானே வேண்டும்?

குடந்தைக்கீழ்க் கோட்டத்துக் கூத்தனாரைப் பாடுகையில், கூரிலங்கு வேற்குமரன் தாதை போலுமென்று (06.075.07) கூரிய வேல் தாங்கிய குமரனின் வீரப்பொலிவைக் காட்டுகின்றன பதிக வரிகள்.

முருகனின் வீரத்தை உலகறியச் செய்யும் நிகழ்வுகளில் சூரனையழித்தது தலையாயதெனலாம். அப்பர் பாடல்களில் சூரபன்மனுமுண்டு. சமர சூரபன்மாவைத் தடிந்தவேற் குமரன் தாதை (05.064.10), என்று திருக்கோழம்பத்துப் பெருமானைப் பாடுகிறார்.

திருவதிகைவீரட்டானப் பதிகத்தில் (04.104.05), பண்டைப் பிறப்பிலேயே சிவனை வழிபடாததால் இப்பிறப்பில் பிச்சையேற்றுண்ணும் நிலைக்காளான தன் நிலையெண்ணி வருந்தும் வாகீசர், 'சூரட்ட வேலவன் றாதை' என்றே இறைவனை விளிக்கிறார்.

முருகனுக்கு மட்டுந்தான் தந்தையா சிவபெருமான்? அதற்கும் விடையுண்டு அப்பரிடத்தில்.

மூவிலைவேல் மூர்த்திகாண் முருக வேட்குத் தந்தைகாண் தண்கடமா முகத்தி னாற்குத் தாதைகாண் (06.065.09) என்று கச்சியேகம்பத்தில் யானைமுகத்தோனையும் சேர்த்துக் கொள்கிறார். திருப்பூவனூரில், வாரணன் குமரன் வணங்குங் கழற்பூரணன் (05.065.10) என்று கூறுமிடத்தில், சிவபெருமானை மக்கள் இருவரும் வணங்குமாறு செய்கிறார். திருப்புறம்பயத்திலும், குமரனும் விக்கின விநாயகனும் இணைந்தே சிவனைப் போற்றுகின்றனர் (06.013.10).

கடம்பன், குமரவேள், முருகவேள், வேல்குமரன், வேலவன் என்பதோடு சேந்தனெனும் பெயராலும் முருகனைக்

குறிக்கிறார் அப்பர்.

குமரன் தந்தையென்றே பெரும்பாலும் சிவனார் குறிக்கப்பட்டபோதும், 'செல்வியைப் பாகங் கொண்டார் சேந்தனை மகனாக் கொண்டார்' (04.043.08) என்று விளிப்புமுறையை மாற்றியும் பாடுகிறார். 'குமரனையும் மகனாக வுடையார் போலுங் குளிர்வீழி மிழலையமர் குழகர் போலும்' (06.053.02), என்று திருவீழிமிழலையிலும் அதே முறையைக் காணமுடிகிறது.

'முக்கணா போற்றி முதல்வா போற்றி; முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி'(06.005.10) என்று, தொன்மங்களும் இலக்கியங்களும் காலங்காலமாகச் சிறப்புடன் போற்றிய முருகனை, இவ்வுலகிற்கு வழங்கியவராகச் சிவனை ஓங்கி நிறுத்துகிறார் திருநாவுக்கரசர்.

கொற்றவைச் சிறுவ என்றும் பழையோள் குழவியென்றும் முருகாற்றுப்படை கொண்டாடிய தாயையும் மகனையும் சிவனுடன் நாவுக்கரசர் ஒருமித்துக் கொணர்வது திருக்கடம்பூர் பதிகத்தில்.

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்

தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான் (05.019.09)

'நம்' கடம்பனென்று பழந்தமிழர் குறிஞ்சிக் கடவுளை உரிமையோடு பாடுபவர், அந்தக் கடம்பனைப் பெற்றவளைப் பாகமாகக் கொண்டவனென்று உரைத்து, எழில்மிகு சிவக்குடும்பத்தைச் சொல்லோவியமாக மிகமிக அழகாகத் தெளிவுபடச் சைவ நெறியாளர்களுக்கு ஓதிச் செல்கிறார். சைவம், சாக்தம், கௌமாரம் என்ற சமயப் பிரிவுகள் மூன்றையும் பத்திமை இலக்கியத்தில் இணைத்துத் தந்த பெரும்பணி அப்பருடையது.

இப்படி, பதிகங்களில் வழங்கப்பட்ட சிவக்குடும்பத்தின் சொல்லோவியமே, இரண்டாம் நரசிம்மவர்மரான இராஜசிம்மர் தமிழகக் கோயில்களில் அறிமுகப்படுத்திய 'சோமாஸ்கந்தர்' என்ற இறைவடிவம். கற்றளிகளுக்கு முன்னரே தமிழகக் குடைவரைகளில் சோமாஸ்கந்தரை இடம்பெறச்செய்த பெருமை இராஜசிம்மரையே சாரும். 'சோமாஸ்கந்தர் வடிவம் சிவபெருமான், உமை, முருகன் எனும் சிவக்குடும்பத்தின் படப்பிடிப்பு', என்று சுவைபட உரைக்கிறார் டாக்டர் இரா. கலைக்கோவன்.

இராஜசிம்மரின் சோமாஸ்கந்தர்



சோமாஸ்கந்தர், மகிஷாசுரமர்த்தினி குடைவரை

நன்றி: டாக்டர் இரா. கலைக்கோவன், பேராசிரியர் மு. நளினி

மாமல்லபுரம் குடைவரைகள் ஒப்பாய்வு 2; வரலாறு.காம்

மாமல்லபுரத்துக் குடைவரைகளில் நடத்தப்பெற்ற நீண்ட நெடிய கள ஆய்வுகளின் அடிப்படையில் எழுதப்பட்ட அன்னாரின் ஒப்பாய்வுக் கட்டுரைகள்

மூன்றும் (டாக்டர் இரா. கலைக்கோவன், பேராசிரியர் மு. நளினி, மாமல்லபுரம் குடைவரைகள் ஒப்பாய்வு1,2,3), தமிழகத்துக் குடைவரைக் கட்டடவியல், சிற்பவியல் குறித்த விரிவான தகவல்களை அளிப்பவை. அக்கட்டுரைத் தொகுதியில், கருவறை இறைவடிவங்களில் சோமாஸ்கந்தர் பற்றிய செய்திகள் தெளிவுற விளக்கப்பட்டுள்ளன.

இராஜசிம்மர் சோமாஸ்கந்தர் வடிவத்தால் பெரிதும் கவரப்பட்டதை, தம் குடைவரையான அதிரண சண்டேசுவரத்தில் அச்சிற்பத்தை கருவறை, முகமண்டபப் பின்சுவர்க் கோட்டங்கள் என்று மூன்றிடங்களில் இடம்பெறச் செய்தமை கொண்டுணரலாம். கூடுதலாக, 'மகிடாசுரமர்த்தினியின் நடுக்கருவறையில் பேரளவினதாக அவ்விறைத்தொகுதி அமைந்திருப்பதும் பல புத்தமைப்புகளுடன் விளங்கும் இராமானுஜர் மண்டபத்திலும் நடுக்கருவறையின் சுவர்க்கோட்டத்தில் அத்திருமேனி இடம்பிடித்திருப்பதும் இம்மூன்று குடைவரைகளின் காலத்தையும் ஒருங்கிணைத்துச் சிந்திக்கத் தூண்டுகின்றன,' என்று கட்டுரையாசிரியர்கள் கூறுகிறார்கள். அப்பரைத் தொடர்ந்த ஏழாம் நூற்றாண்டுத் தமிழகத்தில், குழந்தை முருகனோடிணைந்த சிவனுமை இணையரின் ஓங்கிய செல்வாக்கையே இது காட்டுகிறது.

குடைவரைகளைத் தொடர்ந்து, அத்யந்தகாமத்து மேல்தளக் கருவறையிலும் சோமாஸ்கந்தரை வழங்கும் இராஜசிம்மர், காஞ்சி கைலாசநாதரிலும் பல இடங்களில் படைத்து மகிழ்கிறார்.

`உமையும் ஸ்கந்தனும் இணைந்த சிவ வடிவமே சோமாஸ்கந்தர் (சகஉமாஸ்கந்தர்). இறைவடிவத்தின்பால் கொண்ட ஈர்ப்பைச் சிற்பங்கள்வழி காட்டிய இராஜசிம்மர், தமிழ்க்கடவுள் முருகன்பால் கொண்ட மதிப்பை

அதிரண சண்டேஸ்வரமிதமகரோத் இஹ கிரிதனயா

குஹகனாஸ்ஹிதோ நியதக்குத் தரதிர்பவது பஷூபதிஹி

என்ற சாளுவன்குப்பத்திலுள்ள அதிரண சண்டேசுவரத்து வடமொழிக் கல்வெட்டின்மூலம் வெளிப்படுத்துகிறார். கிரிதனயா/ மலைமகளுக்கும் பசுபதிக்கும் பிறந்த மகனான குகன் அதிரண சண்டேசுவரத்தில் வசிக்கிறார் என்பதே கல்வெட்டின் பொருள்.

காஞ்சிபுரம் இராஜசிம்மேசுவரத்துக் கல்வெட்டிலோ முருகனிடம் கொண்ட பேரன்பைப் பறைசாற்றுகிறார். 'சுப்ரமண்யனென்றும் குமாரனென்றும் அழைக்கப்படும் குகன் சிவனிடமிருந்து வந்ததைப்போல், உக்ரதண்டனிடமிருந்து பகைவர்களைத் தன் வலிமையால் வென்ற ஸ்ரீ அத்யந்தகாமன் பிறந்தார்' என்று தன்னைச் சிவனுடைய மகன் முருகனோடு ஒப்பிட்டுக் கொள்ளும் பாங்கு இதை உறுதி செய்கிறது.



சோமாஸ்கந்தர்,
காஞ்சி கைலாசநாதர்

நன்றி: லலிதாராம்

அரை நாள் பயணம்ஞ்.அரை மனதுடன்; வரலாறு.காம்

பொதுக்காலத்திற்குப் பற்பல நூற்றாண்டுகளுக்கு முந்தைய குறிஞ்சிக் கடவுள் சேயோன், ஏழாம் நூற்றாண்டில் குகனாக மாறிய நெடும்பயணத்தைக் குறிக்கும் கல்வெட்டுக்கள் இவை. முருக வழிபாட்டின் எழுச்சிமிகு மாற்றப் போக்கைக் குறிப்பதே சோமாஸ்கந்தர் சிற்பம். பழந்தமிழர் கடவுளான முருகன் குகனாக மாறிய நீண்ட நெடும்பயணத்தில், சங்கத்தையும் பத்திமைக் காலத்தையும் இணைக்கும் தொடரோட்ட வீரராகப் பதிகங்களால் உயிரூட்டிய பெருமை அப்பருடையது.

சைவத்தை முதன்மைப்படுத்தும் சமயப் பின்னணியில், மரத்திலும் ஊர்மன்றத்திலும் மனைகள்தோறும் மக்கள் உணர்வோடு ஒன்றுகலந்த கடம்பனைக் கோயிலுக்குள் கூட்டிச் சென்று, சிவனோடு வீற்றிருக்கச் செய்தது பத்திமைக் காலம். வேலன் மீதேறிப் புகுந்த முருகன் உமையின் மடியேறியமர்ந்த சூழலைச் சமூகம் சுவைத்ததும் அக்காலத்தில்தான். தம் வாழ்வியலோடு இணைந்திருந்த முருகன்பால் மக்கள் கொண்டிருந்த பேரன்பை, சைவத்தின் வழிவந்த சமயப் பற்றாக மாற்றியமைக்கத் தம் பாடல்களால் வழிகோலியவர் அப்பர். சங்காலத்து மலை உறை கடவுள் நெடுவேள் முருகனை இன்றுவரையில் பத்திமைச் சமூகம் கொண்டாடும் போக்கு, அவர் காலத்தே ஆணித்தரமாகப் புகுத்தப்பட்ட மாற்றநெறியை ஒட்டியே அமைந்ததைப் பார்க்க முடிகிறது.

சங்ககால இலக்கியங்களுள் காலத்தால் முற்பட்டவை, முருகனின் வீரம் செறிந்த ஆற்றலையும் மிடுக்கையும் காட்டிட, பிற்கால நூல்களான பரிபாடலும் முருகாற்றுப்படையும் புராணங்களோடு தொடர்புபடுத்தி, பிறப்பு முதல் மேலும் பல வீரச் செயல்களைப் பட்டியலிட்டு, மலைக்கடவுளைத் தேவர்கள் வீட்டு மருமகனாகவும் ஆக்குகின்றன. முருகாற்றுப்படை,

தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின்
வான்தோய் நிவப்பின் தான் வந்து எய்தி (287288)

என்று, ஒளி பொருந்திய தெய்வ வடிவில் முருகனை விண்ணைத் தொடும் பேருருவாகக் காட்டி மெய்சிலிர்க்க வைக்கிறது.

எனினும், பேருருவாக வளர்ந்த தன்னிகரற்ற முருகனை அப்பரும் சம்பந்தரும் சிறுகுழந்தையாகத் தந்தை தாயிடையிலும் உமையவள் மடியிலும் எழில் சிறுவனாக அமரச் செய்து அழகு பார்த்ததும், பல்லவர் போற்றிய சோமாஸ்கந்தராகக் கோயில்களில் இன்றுவரை அவ்வடிவம் நிலைபெற்று நிற்பதும், சமய எழுச்சியால் ஏற்பட்ட சமூக மாற்றங்களை வெள்ளிடை மலையெனக் காட்டும் பத்திமைக்காலச் சமய மெருகூட்டல் எனலாம்.

நன்றி: டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி

## துணை நூல்கள்

1. டாக்டர் இரா.கலைக்கோவன், பேராசிரியர் மு. நளினி, மாமல்லபுரம் குடைவரைகள் ஒப்பாய்வு1,2,3

2. டாக்டர் இரா. கலைக்கோவன், இருண்ட காலமா?

3. டாக்டர் இரா. கலைக்கோவன், அத்யந்தகாமம்

4. சங்க இலக்கியங்கள் எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும்

# ஆதி சங்கரரின் சுப்ரமணிய புஜங்கம்

## தமிழ் மொழியாக்கம் (பகுதி 1)

முனைவர் ரெ.சந்திரமோகன், முதல்வர்,
முனைவர் வ.மீனாட்சி, தமிழ்த்துறைப் பேராசிரியர், நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

இந்து மதத்தின் ஆறு வகை சமயங்களையும் ஒருங்கிணைக்க அரும்பாடுபட்டவர் ஆதிசங்கரர். ஆதிசங்கரர் சைவமா? வைணவமா? என்று அவரையே பாதியாக்கிப் பார்ததனர் நம் மக்கள். 'அத்துவிதம்' என்ற சித்தாந்தத்தை முன்னறுத்தி பாரதம் முழுதும் பயணித்த ஆதிசங்கரர் கணக்கற்ற நூல்களுக்கு விரிவுரையெழுதி உள்ளார். பண்டிதரும் பாமரரும் அவரவரது பக்குவத்திற்கு இணங்க புரிந்து மேன்மையுறும் வழியைக் கண்டவர் ஆதிசங்கரர். அவரது எண்ணற்ற பாஷ்யங்கள் சுமார் ஆயிரம் ஆண்டுகளாக அறுவகை சமயத்தினரையும் ஒருங்கிணைகிறது என்றால் மிகையாகாது. கனகதாரா ஸ்தோத்ரம், பஜகோவிந்தம் போன்றவை மிகப் பிரபலமானவை. அவரது சுப்பிரமணிய புஜங்கப் பாடல்கள் மிகச் சிறப்புப்பெற்றவை.பாம்புவளைந்து வளைந்து செல்லும் வடிவில் அமைக்கப்பட்டிருக்கும். இந்நூல் திருச்செந்தூர் முருகன் மீது வடமொழியில் பாடப்பெற்றது. இது மிக எளிமையான நிலையில் அரிதான பொருள்கள் அமைந்ததாகும்.

இதனைப் பாராயணம் செய்தால் நல்ல மனைவி, பிள்ளைகள், நீண்ட ஆயுள் முதலியவை கிடைக்கும். இதுவே நம்மை முருகப் பெருமான் திருவடியில் சேர்க்கும். இதில் முருகனின் அடி முதல் முடி வரை வருணனை இடம் பெற்றுள்ளது. மேலும் சுப்பிரமணிய உபாசனை, நோய் நீக்கும் மந்திரம், ஆறெழுத்து மந்திரத்தின் பெருமை, விபூதி விழுச்செல்வச் சிறப்பு, சக்திவேலின் சிறப்பு என்று பல செய்திகள் இடம்பெற்றுள்ளன. வடமொழியில் உள்ள 33 சுலோகங்கள் தமிழில் மொழியாக்கம் செய்து இங்குப் பகுதி பகுதியாக வழங்கப்படுகின்றன.

### சுப்ரமணிய புஜங்கம்

#### 1. விநாயகர் வாழ்த்து

என்றும் பாலக வடிவினனே! எதிர்வரும் வினைமலை தகர்ப்பவனே!

ஆனை முகமே என்றாலும் சிம்மமும் நினையே வணங்குதய்யா! நினைத்

தேடும் பிரமாதி தேவர்க்கும் தந்தையாய் அருளிய கணேசனே !உனை

நாடும் எனக்கும் நற்செல்வம் நல்குவாய் மங்கள விநாயகனே

#### 2. அவை அடக்கம் முருக துதி ஞானம் வேண்டி

சொல்லின் ஒலியும் அறியாதான் அதன் பொருளும் தெரியாதான்

சொல்லின் பொருள்பதம் தெரியாதான் அதன் பின்வரும் தொடரும் புரியாதான்

என்மனக் குகை உறை அறுமுகங்கள் ஒளிர்விடும் செயலால் அது தருமே

எழில்மிகு ஒளிர்தரு பண்மொழியை உன்துதியென நீ ஏற்றருள்வாய்!

### 3. வேதாந்தப் பொருள்

வேதமே மயிலாய் வீற்றிருக்க அதன் விரிவாய் நீயும் மேலிருக்க உன்

பாதச் சலங்கை பாடிடுமே மன்மதனும் தோற்ற உன் திருமுகத்தை

அந்தணர் போற்றுவர் தேவதேவா! அழகனே! திருமால் மருகனே!

செந்தளிர் பரமசிவ பாலகனே உனையே தொழுவேன் சிறியேனே!

### 4. துதி

பிறவிக்கடலைக் கடப்பதற்கு செந்தில் கரை வந்தால் போதுமென்று

உறவுக் கரத்துடன் வேலேந்தி செந்தூர் கடற்கரை அமைந்தாயோ!

எக்கணம் அக்கரை வந்தாரோ அக்கணமே கரை அடைந்தாரே!

அக்கறை என்மீது கொண்டவனே! ஏற்பாய் இந்த சொல்மாலை!

### 5. அனைத்து நோய் நீங்குதல்

இதயக்கோவில் அமர்ந்துள்ள எந்தை குகனை தியானிக்க

உதயமாயிடும் நம்வாழ்வு உன்னதம் தருவான் அறுமுகனே

அடுக்கடுக்காய் வரும் கடலலைகள் செந்தூர் கரையில் அழிவதுபோல்

அடுக்கிய கோடி வேதனைகள் அழிந்து ஆனந்தம் தவழ்ந்திடுமே!

### 6. சரவணபவ மந்திரம்

சுப்ரமணியன் வசிக்கின்ற செந்தூர் பர்வதமலை வந்தாலே அவன்

அப்பன் வசிக்கும் கைலாயம் ஏகிய பலனெல்லாம் கிடைக்குமே

என்றே சொல்வர் அடியார்கள் அதனால் முனிவரும் தவம் செய்வர் உயிர்க்கு

அருள்தரும் சரவணபவ மந்திரமே! நாளும் ஓதி வணங்குவனே!

### 7. குகக்காட்சி நன்மை

திருச்செந்தூரின் கடற்கரையில் திகழும் மலையின் நாயகனே!

திருமிகு முனிவர்கள் தவம்செய்ய ஒளிமிகு குகை பாவம் தீர்த்திடுதே!

ஒரு கோடி ஞாயிறு ஒளி மிஞ்சும் உன்முகங்கள் ஒன்றாய்ச் சேர்ந்திடவே

திருக்கூடி இருள் நோய்கள் ஓட்டிடுதே எங்கள் நாயக அருளொலியே!

### 8. பள்ளியறைக் காட்சி

தங்கமயமான பள்ளியறை நறுமணம் நிறைந்த பள்ளியறை

அங்கமெல்லாம் ஒளிவீச அமர்ந்தாய் மாணிக்கக் கட்டிலிலே!

அழகிய கார்த்திகை அன்னையரோ அருகே அமர்ந்து தாலாட்ட!

பழகிய உந்தன் திருவடியோ கருணையுடன் எமைப் பார்க்குதய்யா!

### 9. திருப்பாத வர்ணனை

அன்னப்பறவை பாடிடவே அழகாய் ஆடிடும்நின் சேவடியே!

அமுதம் சுமந்த தாமரைபோல் அழகுடன் விளங்கும் சேவடியே

தேனை நாடும் வண்டினைப்போல் எந்தன் மனமும் ஆடுதய்யா!

ஊனை உருக்கும் தவம்செய்ய செந்தாமரைத் தாளிணைத் தந்தருளே!

10. இடை வர்ணனை

மணிகள் இடையில் பாட்டிசைக்கும் அதனுடன் ஆடிஅசைந்தனவே

அணிகலன் அனைத்தும் ஆசைதரும் மின்னும் தங்க நிறத்துடனே

தவழும் ஆடை மனமகிழ்வுதரும் ஆனால் மின்னொளி போன்றதே

பவளமாய் ஒளியிடும் இடைதனிலே என்றும் என்மனம் நின்றிடுமே!

11. மார்பு வர்ணனை

தாரகா சுரனை வதைத்தவனே சங்கரன் புதல்வா சண்முகனே!

தூயவள் தங்கக் குறவள்ளி தங்கவே உந்தன் திருமார்பில்

கொங்கைக் குங்குமத் தடம்பார்த்து விம்மும் என்னைப் பாரப்பா

எம்கைத் தொழுதிடும் ஏனப்பா! உன் இதயம் உள் சிவந்தது எனக்கப்பா!

## நல்வழி பாடல்கள்

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் ஏற்றவர்க்கு
நல்ல குடிபிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லை என மாட்டார் இசைந்து

**விளக்கம்:** ஆறு நீர் வற்றிப் போய் கால் சுடும் அளவிற்கு வெறும் மணல் பரப்பாக இருந்தாலும் அதைத் தோண்டுவோருக்கு, ஊற்றின் வழியாக நீர் கொடுத்து இந்த உலகதிற்கு உதவும். இந்த ஆற்றின் தன்மைபோல நல்ல மனம் படைத்தோர், நல்ல காரியங்கள் செய்யும் நல்ல குடியில் பிறந்தோர் தம் வாழ்வில் வறுமை வந்து சேர்ந்தாலும், அடுத்தவர் கேட்கும் போது இல்லை என்று சொல்லாமல் தங்களிடம் உள்ள பொருளைக் கொடுத்து உதவுவார்கள்.

***********

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர் வேண்டா!
நமக்கும் அதுவழியே! நாம்போம் அளவும்
எமக்கென்? என்(று) இட்டு, உண்டு, இரும்

**விளக்கம்:** பல ஆண்டுகள் அழுதாலும் இறந்தவர் திரும்ப இந்த பூமிக்கு வருவதில்லை, பல முயற்சி செய்தாலும் இறப்பை தள்ளிபோடலாமே தவிர தவிர்க்க/ தப்பிக்க முடியாது. இறப்பு உறுதியாக அனைவருக்கும் இறுதியில் வரும். ஆதலால் இருக்கின்ற காலத்தில் அதாவது வாழும் காலத்தில் நமக்கு மட்டும் என்று சேர்த்து வைக்காமல் நம்மால் முடிந்த பொருள்களை அடுத்தவருக்கு கொடுத்து நாம் வாழ வேண்டும்.

ஐந்தொகை காட்டும்

பகுதி–2 தொடர்ச்சி

# தமிழர் சமயமும் கட்டடக் கலையும்



**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

கடவுட் கற்சுனை, கடவுள் முதுமரம், கடவுள் ஓங்குவரை, இல்லுறைக் கடவுள் என்னும் சொற்றொடர்கள் நற்றிணையிலும் அகநானூற்றிலும் பல பாடல்களில் பயின்று வந்துள்ளன. பெண்ணை, ஆலம், வேம்பு முதலிய மரங்கள் கடவுள் குடியிருக்கும் மரங்களாகவே வணங்கப்பட்டன. ஊர்ப்பொதுவில் இருந்த பருத்த அடியை உடைய பனைமரத்தில் பண்டைக் காலந்தொட்டே இறைவன் உறைந்திருப்பதாகப் பாடலொன்று பேசுகிறது. தெய்வம் தங்கியிருந்த பெரியதொரு வேப்பமரத்தடியில் கொழுத்த பசுவொன்றைக் கொன்று அதன் இரத்தத்தைத் தூவிப் பலியிட்ட மழவர்களைக் கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார் காட்டுகிறார். இந்தப் பலிக்குப் பிறகு பசு வீரர்களின் உணவானதையும் அவர் காட்டத் தவறவில்லை. இன்றைக்கும் திருச்சிராப்பள்ளியில் குழுமாயித் தெய்வத்தின் பெயரால் பூசாரிகள் ஆட்டின் இரத்தத்தைக் குடிப்பதும் அதன் புலாலைப் பலியிடும் மக்கள் உணவாய்க் கொள்வதுமான பழக்கம் நடைமுறையில் உள்ளது.

இறைவன் தங்கியிருந்ததாகக் கருதப்பட்ட மரங்களை மக்கள் வழிபட்டு, மலர்களையும் உணவையும் இட்டனர். இவற்றை அருந்தக் காக்கைகளும் பேய்களும் காத்திருந்தன. ஊர்ப்பொதுவில் இருந்த மரத்துறை தெய்வத்திற்கும் ஊர்த் தெய்வங்கட்கும் பொதுவாகப் பலியிடும் பழக்கமும் இருந்துள்ளது. இதை ஊரில் இருந்த வயது முதிர்ந்த குயவர் செய்தனர். அவர்கள் மன்றத்தே பலியிட்டு, அதை உண்ண வருமாறு காக்கைகளையும் அணங்குகளையும் அழைத்தமையை, ‘பார்முது குயவன் இடுபலி நுவலும் அகல்தலை மன்றம்’ என்னும் நற்றிணை அடி தெளிவாக்கும். தேவர்கள் உண்பதற்காக வேள்விகளில் ஆமைகள்

இடப்பெற்றதாக எயினந்தை மகனார் இளங்கீரனார் கூறுகிறார். இதைத் திருத்தக்கதேவர் சீவக சிந்தாமணியில் உறுதிப்படுத்துகிறார். இத்தேவர்கள் சூடியிருந்த மலர்கள் வாடாமலர்கள் என்கிறது அகப்பாடல் ஒன்று.

கணவரும் பிள்ளைகளும் கடலில் மீன் வேட்டைக்குப்போக, அவர்கள் நலமாய், வளமாய்க் கரை திரும்பத் துறைத் தெய்வத்திடம் ஆயத்துடன் போய்க் கைதொழுது வணங்கி வேண்டிக் கொண்ட மீனவத்தாயை அகநானூற்றுப் பாடல் காட்டுகிறது. இதையே 'கைதொழு மரபில் கடவுள்' என்கிறது மற்றொரு பாடல். துறையுறை தெய்வத்திற்குக் கள்ளும் கண்ணியும் வெள்ளைக் கிடாவும் தந்து மகள் நோய் தீர்க்க மன்றாடி வேண்டிய மருதத்தாயை ஆலூர் மூலங்கிழார் படம்பிடிக்கிறார்.

வீட்டுத் தெய்வத்தைப் பற்றிப் பேசும் அகநானூற்றுப் பாடல் இல்லத்தில் இறைத்திருமேனிகள் இடம்பெற்றிருந்த தகவலைத் தருகின்றது. திருமணத்திற்கு முன் வீட்டாரே இத்தெய்வத்தை வழிபட்டமையை, 'நல்லிறை மெல்விரல் கூப்பி இல்லுறை கடவுள் கோக்குதும் பலியே' என்னும் அடிகள் தெரிவிக்கின்றன.

தெய்வத்தின் முன் பலியிட்டுப் பரவியது போலவே யாழ் கொண்டு இசையெழுப்பியும் கூட்டமாய்க்கூடி ஆடியும் களித்த மக்கள் இறைவனிடம் பல வேண்டுதல்களையும் வைத்தனர். 'குறவன் கடவுள் பேணி இரந்தனன் பெற்ற குறுமகள்' என்னும் ஐங்குறுநூற்று அடி குழந்தைப் பேற்றுக்குக் கடவுளை வேண்டி இரந்திருந்த சங்கமரபுகளைச் சுட்டுகிறது. விருதுநகர் மாவட்டத்துச் சோழபுரத்திலுள்ள விக்கிரமபாண்டீசுவரத்துத் தூண் கல்வெட்டுகள் இரண்டு இது போன்ற மகப்பேறு வேண்டலுக்கும் வேண்டுதல் நிறைவேறிய நிலையில் காணிக்கை தந்த கடமை உணர்விற்கும் சான்றுகளாய்த் திகழ்கின்றன. கடவுள் பேணி, வழிபடு தெய்வம் எனும் தொடர்கள் வழிபாட்டின் சிறப்பையும் சங்க மக்களுக்கு இருந்த கடவுள் நம்பிக்கையையும் தெரிவிக்கின்றன. விருந்தினரைக் காக்குமாறு வேண்டிப் புறங்கடையில் பலியுதிர்த்த சங்க மகளிரின் பண்பாடு வியக்கவைக்கிறது.

வடக்கேயுள்ள நீர்வளம் குறையா யமுனைத் துறையில் நீராடிய ஆயர் மகளிர் தழையாடை உடுத்திக்கொள்ளுமாறு குருந்த மரத்தைக் காலால் மிதித்துக் கண்ணன் வளைத்ததாக மருதன் இளநாகனார் கூறுகிறார். 'மால்' என்ற சொல்லால் இப்பாடலில் கண்ணன் குறிக்கப்படுகிறார். பாண்டியரின் பழம் பெருமை மிக்க நாட்டின் தென்கோடியில் உள்ள கடல் முழங்கும் துறையில் போரில் வெல்லும் ஆற்றல் மிக்க இராமன் அருமறைகளை ஆராயும் பொருட்டுத் தங்கியிருந்தபோது, அச்செயலுக்குத் தொல்லையாய் ஆலமரத்துப் பறவைகள் ஒலி எழுப்பின. ஆய்வுக்கு அமைதிநாடிய அண்ணல், ஆலமரப் பறவைகளை ஒலியடங்குமாறு செய்ததாக மதுரைத் தமிழ்க் கூத்தனார் சொல்கிறார். இராமன் பறவைகளை அடக்கிய இத்தென்முது கோடியைத் திருவணை என்கிறார் உரையாசிரியர். இவ்விரு பாடல்களும் திருமால் தொன்மங்கள் தமிழகத்தில் வழக்கில் இருந்த சூழலைச்

சுட்டுகின்றன.

'வெருவறு கடுந்திறல் இருபெரும் தெய்வத்து உருவுடன் இயைந்த தோற்றம் போல அந்தி வானமொடு கடலணி கொளா வந்த மாலை' என்று மாலைக்கால அழகு பேசும் அகநானூற்றுப் பாடல் தமிழகத் திருவுருவ இயல் வரலாற்றில் தனியிடம் பெறத்தக்கது. அந்தி நிறக் கடவுளும் கடல் நிறக் கடவுளும் இயைந்த ஓர் உருவம் என்று இப்பாடலடி குறிப்பது சிவ பெருமானும் திருமாலும் ஒன்றிணைந்து நிற்கும் அரிஅரர் வடிவத்தையே என்பதில் அய்யமில்லை. இதை உறுதிப்படுத்துமாறு போலக் காலத்தால் மிக முற்பட்ட குடைவரைகளுள் ஒன்றான பிள்ளையார்பட்டிக் குடைவரையில் இந்த அரிஅரர் வடிவம் இடம்பெற்றுள்ளது. இது தவிர தந்திவர்மர் காலத்து மலையடிப்பட்டி சிவன் குடைவரையிலும் எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த குன்றக்குடி முதற் குடைவரையிலும் இவ்வடிவங்கள் காணக்கிடைக்கின்றன. பின்னாளில் சோழர்களாலும் விரும்பி ஏற்கப்பட்ட இருபெரும் இறைகள் இணைந்த இந்தத் திருவுருவம் சங்கப் பழைமையது என்பது குறிப்பிடத்தக்கது.

சேரமன்னனின் கொல்லிமலையில் தெய்வம், பூதம், பாவை என மூன்றும் இருந்ததாக நற்றிணைப் பாடல்கள் சொல்கின்றன. அவற்றுள் பாவையே சிறப்புக்குரியதாகப் பேசப்படுகிறது. இந்தப் பாவையைத் தெய்வம் எழுதியதாக ஒரு பாடலும் பூதம் புணர்த்ததாக மற்றொரு பாடலும் கூறுகின்றன. 'வினை மாண் பாவை', 'புதிது இயல் பாவை' எனும் அடைகளும் இப்பாவை பற்றி உரையாசிரிகள் தரும் விளக்கங்களும் ஆய்வுக்குரியவை. இப்பாவையைத் தெய்வம் காப்பதாகக் கூறும் மற்றொரு நற்றிணைப் பாடல், மோதியடிக்கும் சூறைக்காற்று, தொடர்ந்து கொட்டும் பெருமழை, முழங்கி எறியும் இடி மின்னல், நிலத்தைப் பிளக்கும் புவிஅதிர்வு மற்றும் இன்னோரன்ன துன்பங்கள் தோன்றினும் தொடரினும் இப்பாவை தன் அழகிய வடிவம் கெடாது இருக்கும் இயல்பினது என்றுரைக்கிறது. வீடுகளில் எழுதப்பெற்றிருந்த இது போன்ற பாவைகள் காலப்போக்கில் நிறம் கலங்கியதை மற்றொரு பாடல் எடுத்துரைக்கிறது. மணிமேகலைக் காலக் கந்திற்பாவைக்கு இவை முன்னோடிகளாய் விளங்கின எனலாம். இன்றைக்கும் கந்திற்பாவைகளைக் குமரி மாவட்டக் கோயில் சுற்றுகளில் வரிசையாகப் பார்க்கமுடிகிறது.

அகநானூற்றுப் பாடலொன்றும் பூதத்தைக் குறிக்கிறது. இப்பூதம் பருத்த அடியை உடைய வேங்கை மரத்தைத் தந்ததாகவும் இம்மரம் வீரப்பெருமகனாரான கழுவுள் என்பாரின் காமூரில் இருந்ததாகவும் மருதன் இளநாகனார் குறிக்கிறார். கதிரவன் ஒரு சக்கரத் தேரில் வருவதாக ஒரு பாடலும் அவன் பல குதிரைகள் பூட்டிய தேரில் வருவதாக மற்றொரு பாடலும் தெரிவிக்கின்றன. பிறை நிலவை மகளிர் தொழுது வணங்கியதாகப் பல பாடல்கள் பேசுகின்றன.

ஊர்இருக்கைப் பகுதிகளில் இருந்த கட்டடங்கள் பற்றியும் பல குறிப்புகள் தொகைநூல்களில் கிடைக்கின்றன. அவை நகர்ப்புறம், ஊரகம் எனப் பிரிக்கத்தக்கன. மதுரை, உறையூர்,

புகார், வஞ்சி போன்ற பெருநகரங்களும் செல்லூார், வேளூர், ஊணூர், ஆமூர், நீடூர், போரூர், முள்ளூர், கள்ளூர், வெண்மணி, ஆலங்கானம், இடையாறு, முசிறி, பேரூர், மாந்தை, வல்லம், கழார், பவத்திரி, கொற்கை, தொண்டி போன்ற பல ஊர்களும் குறிக்கப்படும் இந்நூல்களில் பல்வேறு கட்டட அமைப்புகள் பேசப்படுகின்றன.

புல் வேய் குரம்பை, குறி இறை குரம்பை, குவிந்த குரம்பை, புதுக்கலத்து அன்ன செவ்வாய்ச் சிற்றில் எனக் குடில்களும் சிறு வீடுகளும் பேசப்படுகின்றன. புல் வேய் குரம்பை ஒரு பசு கட்டிய ஒரு தூண் முகப்புடைய எளிய வீடாகக் காட்டப்படுகிறது. பெருவீடுகள் நகர் என்ற சொல்லால் குறிக்கப்பட்டுள்ளன. இந்த நகர் என்ற சொல் இறைக்கோயில்களைக் குறிக்கவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. மாட மாண் நகர், விண்பொரு நெடு நகர், சீர்கெழு வியன் நகர், அருங்கடிக் காப்பின் அகல் நகர், நெடுநிலை வியன் நகர், வரை குவிந்தன்ன வான் தோய் நெடுநகர், நன்மனை நெடுநகர் என்னும் தொடர்கள் பெருவீடுகளின் பல்வேறு வளமைகளை விளக்குகின்றன. நீண்டும் நெடி துயர்ந்தும் பேரகலத்தினவாகவும் குன்றென அமைந்திருந்த அவ்வீடுகள் அரிய காவலும் பெற்றிருந்தன. சுதை பூசப்பெற்று, ஓவியங்களால் அழகுபடுத்தப்பட்டிருந்த அவை வினைவளம்கெழு திருநகர்களாகப் போற்றப்பட்டன. இந்தப் பெருவீடுகளுக்கும் குரம்பைகளுக்கும் இடைப்பட்ட நிலையில் இருந்த கட்டுமானங்கள் ‘இல்’ எனப்பட்டன. இவ்வீடுகளும் நகர்கள் போலவே கைவல்ல தொழிலர்களால் அழகுபடுத்தப்பட்டிருந்தமை ‘ஓவத் தன்ன வினை புனை நல் இல்’ என்னும் பாடலடியால் விளங்கும்.

உறையூர், மதுரை முதலிய நகரங்கள் மதில்களைக் கொண்டிருந்தன. அம்மதில்களின் நிறைநிலை ஞாயில்களை இளவேட்டனார் குறிப்பிட்டுள்ளார். ‘மாடம் மலி மறுகின் கூடல்’ என்று மதுரையைப் போற்றும் பாடலடி மதுரைத் தெருக்களில் நிறைந்திருந்த மேன்மாட வீடுகளைக் கண்முன் நிறுத்துகிறது. அவ்வீடுகளில் நிலாமுற்றங்கள் இருந்தன. அவற்றை அகநானூறு ‘அரமியம்’ என்ற சொல்லால் குறிக்கிறது. இச்சொல் இன்னாளில் கோயில் விமானத்தின் தளக் கட்டுமானங்களைச் சுட்டப் பயன்படுகிறது.

புகாரில் இருந்த நடுநிலை வீடுகள்கூட சிகரம் தோன்றும் சேண் உயர் நல் இல்களாக விளங்கின. அவற்றைச் சுற்றி நெடுமதில்கள் அமைந்திருந்தன. வீட்டின் நெற்றிப்பகுதிகள் மகர தோரணங்களால் அழகு செய்யப்பட்டிருந்தன. இது போன்ற இல்களிலும் நகர்களிலும் சுவர்கள் பாவைகளைக் கொண்டிருந்தன. ஓவியமாகவும் சுதைவடிவிலும் இருந்த இப்பாவைகளுக்கு வண்ணமிட்டு, முத்துவடம் போன்ற அணிகலன்களை அணிவித்துப் பலிகளும் இட்டதாக நக்கீரர் சொல்கிறார். இந்தச் சுவர்ப்பாவைகள் மகளிரின் விருப்பத்திற்குரிய பாவைகளாக விளங்கின. ஊர்மன்றங்கள் தூண்களைக் கொண்டிருந்ததாகக் கூறும் அகநானூறு ஊரில் சேரிகளும் உடன் இயைந்து விளங்கியதாகத் தகவல் தருகிறது. இச்சமூகக் கட்டமைப்புகள் தனி ஆய்வுக்குரியன.

# முருக வழிபாடு





டாக்டர். வ.ஜெயபாலன்
ஈப்போ, மலேசியா

வழிபாடு என்பது பக்தியுணர்வின் வெளிப்பாடு. தமிழர்களுக்குப் பக்தியுணர்வு என்ற ஓர் உணர்வு என்றைக்குத் தோன்றியதோ, அன்றைக்கே அதை வெளிப்படுத்தும் முறையாக முருக வழிபாடும் தோன்றியிருக்க வேண்டும்.

ஆதித்தமிழனின் முருக வழிபாட்டின் அடிநாதம் வேல் வழிபாட்டில் தொடங்குகிறது. வேல் வழிபாடும் நடுகல் வழிபாடும் தமிழர்களின் முதல் வழிபாட்டு முறைகள். இதைச் சங்க இலக்கியம் பதிவு செய்கின்றது. ஆனால், இதில் நடுகல் வழிபாடு என்பது போரில் இறந்த வீரர்களையும் சமுதாயத்தில் சான்றோர்களாக வாழ்ந்தவர்களையும் போற்றி வழிபடும் ஒரு பழக்கம். இதை இறை வழிபாட்டுக் கொள்கையுடன் இணைத்தல் கூடாது.

வேல் வழிபாடு எப்படித் தோன்றியிருக்கக் கூடும்? அதன் பரிணாம வளர்ச்சி என்ன? என்பதை இதற்கு முந்தைய பதிவில் நாம் சிந்தித்தோம்..

முருக வழிபாட்டில் வேல் என்பது முருகனின் ஆயுதமல்ல. அதுவே, முருகனின் முதல்வடிவம் என்ற சிறப்பைப் பெற்றது . வேல் வழிபாட்டில் தொடங்கிய முருக வழிபாடு, அதற்கடுத்த கட்டமாக முருகப்பெருமானின் திருவுருவத்தை மையப்படுத்திய வழிபாடாக வளர்ந்தது. ஆனால், முருகனின் திருவுருவ வழிபாட்டு முறைகள், நீட்சி பெற்ற அதே வேளையில்

வேல் வழிபாடு, சிவலிங்க வழிபாட்டைப் போல முருகனின் அருவுருவ வழிபாடாக நிலைபெற்றது.

**திருமுருகாற்றுப்படை**

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்"

என்று தமிழர் வாழும் நிலங்களைப் பிரித்து, அந்தந்த நிலங்களுக்குரிய பெருந்தெய்வங்களைப் பட்டியலிடுகின்றார் தொல்காப்பியர்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நிலங்களுக்கு உரிய தெய்வங்களைச்






சொன்னவர் பாலைவனமாக இருக்கும் பாலை நிலத்தைத் தனியாகச் சொல்லவில்லை. மழையில்லாத காலத்தில் மேற்சொன்ன நானிலங்களும் பாலையாகக் காட்சி தரும். அந்தப் பாலை நிலத்திற்கான தெய்வம் கொற்றவை. இதில், சிவபெருமானைத் தனியாகக் குறிப்பிடாததற்குக் காரணம், 'சேயோன்' என்ற சொல் சிவனையும் ஒருசேரக் குறிக்கும். சிவபெருமான் இருப்பிடமும் மலையும் மலைசார்ந்த இடங்களும் ஆகும். மேலும், சிவன் வேறு, முருகன் வேறு என்ற பாகுபாடு இல்லாத நிலையில் முருகனையும் சிவனையும் குறிக்கும் சொல்லாக, 'சேயோன்' என்ற சொல்லைப் பயன்படுத்தினார் தொல்காப்பியர்.

இந்த ஐந்து நிலப்பரப்புகளில், முதலில் தோன்றியது மலையாகிய 'குறிஞ்சி' நிலப்பரப்பு. அங்கே, வாழ்ந்த மனிதர்கள், முருகனை வழிபட்டதால், முருக வழிபாடே, தமிழர்களின் முதல் இறை வழிபாடு என்பது தெளிவு.

தொல்காப்பியர் தமிழர்கள் வழிபடு தெய்வங்களைக் குறிப்பிட்டுப் பதிவு செய்திருந்தாலும் முருக வழிபாட்டினை

முதன் முதலில் நமக்கெல்லாம் ஆற்றுப்படுத்திய பெருமை நக்கீரரையே சாரும். நக்கீரரின் திருமுருகாற்றுப்படை முருகனை மட்டுமல்ல முருக வழிபாட்டையும் முதன்முதலில் தமிழ்க்கூறு நல்லுலகத்திற்கு ஆற்றுப்படுத்தியது. இதுவே தமிழ் மொழியில் தோன்றிய முதல் பக்தி இலக்கியம். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்ற முப்பத்தியாறு சங்க இலக்கியத்தில் முதலாவதாகவும் சங்க இலக்கியத்தின் இறை வணக்கமாகவும் வைத்துப் போற்றப்படும் ஆற்றுப்படை இலக்கியம் இந்தத் திருமுருகாற்றுப்படை. இதைச் சைவர்கள் தங்கள் பன்னிருதிருமுறைகளுள் ஒன்றாக, பதினோராம் திருமுறையாகத் தொகுத்து, இதன் புனிதம் காத்தார்கள். திருமுருகாற்றுப்படையில் முருகனே பரம்பொருளாக வணங்கப்படுகிறான். இதில் முருகனையும் இயற்கையையும் ஒருசேரப் பாடுகிறார் நக்கீரர்.

முருகனின் ஆறுமுகத் தத்துவம், பன்னிரு கரங்களைப் பற்றிய செய்திகள், அவன் திருக்கைவேல், முருகனின் தேவியர் இருவரின் இயல்புகள், சேவற்கொடி, மயில் என்று முருகனைப் பற்றிய எல்லா விவரங்களையும் திருமுருகாற்றுப்படை பதிவு செய்கின்றது.

முருகன் குடிகொண்ட ஆலயங்கள், அவனை வழிபடும் முறைகள், முருகனுக்குப் பிடித்த நிறம், அவன் வாகனங்கள் என்று முருகவழிபாட்டின் சாரத்தை முழுவதுமாக முந்நூற்றுப் பதினேழு வரிகளில் சொல்வதும் இந்நூலே. இந்நூல் முருக வழிபாட்டின்





தோத்திர நூலாகவும் சாத்திர நூலாகவும் சான்றோர்களால் ஓதி உணரப்பட்டது.

இதைத் திருமுருகாற்றுப்படைக்குச் சாற்றுகவியாக விளங்கும் தனிப்பாடல் ஒன்று குறிக்கின்றது.

"பரங்குன்றில் பன்னிருகைக் கோமான்தன் பாதம்

கரம்கூப்பி கண்குளிரக்கண்டு சுருங்காமல்

ஆசையால் நெஞ்சே! அணிமுரு காற்றுப்படையைப்

பூசையாக் கொண்டே புகல்"

திருமுருகாற்றுப்படையை இன்றைக்கும் இலங்கைச் சைவர்கள், கதிர்காமத் திருத்தலத்தில் ஓதுவதும் இங்கே குறிப்பிடத்தக்கது.

நக்கீரருக்குப் பிறகு முருக வழிபாட்டில் ஒரு இடைவெளி . களப்பிரர் காலத்திற்குப் பிறகு கி.மு.நான்காம் நூற்றாண்டில் சைவ வைணவ எழுச்சி பிறந்தது. திருமுறைகளில் ஆங்காங்கே முருகனைச் சிறப்பிக்கும் பாங்கு வளர்ந்தது. பதிமூன்றாம் நூற்றாண்டில் கச்சியப்பர் வைணவர்களின் இராமாயணத்துக்கு இணையாக, கந்தபுராணத்தை எழுதி ஒரு முழுமையான முருக தத்துவத்தைப் பதிவு செய்கிறார். அதைச் சைவ சித்தாந்தத்தோடு பொருத்திச் சொல்கிறார்.



அவருக்குப் பின், பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வந்த அருணகிரிநாதர், தனித்திருந்த கௌமாரத்தை சைவத்தோடு பிணைத்து வைக்கின்றார். முருகன் வேறு, சிவன் வேறு இல்லை என்ற தத்துவம் நிலை நாட்டப்படுகின்றது. முருக வணக்கத்தை ஒரு சமரச வழிபாட்டு நெறியாகவும் அதே நேரத்தில் முருகனை முதன்மைப்படுத்திய பரம்பொருள் வழிபாடாகவும் அருணகிரிநாதர் நிறுவுகிறார். அவருக்குப் பின் வந்த திருப்போரூர் சிதம்பரம் சாமிகள், வண்ணச்சரபம் தண்டபாணி சாமிகள், பாம்பன் சாமிகள், வள்ளிமலை சாமிகள், மதுரை திருப்புகழ்சாமி ஐயர், வாரியார் சாமிகள் முதலான முருகனடியார்களெல்லாம் அருணகிரிநாதர் காட்டிய வழியிலேயே முருக வழிபாட்டினைக் கொண்டு சென்றனர்.

## முருக வழிபாட்டின் பரிணாம வளர்ச்சி

இன்றைக்கு நாம் காணும் முருக வழிபாட்டு முறைகள் கிட்டத்தட்ட ஏழாயிரம் ஆண்டுகளைக் கடந்து வந்துள்ளதை உலக வரலாறு பதிவு செய்கின்றது. கடம்ப மரத்தடியில் வேல் வழிபாடாகத் தொடங்கி, பின்னர் உருவ வழிபாட்டோடு இணைந்து, வைதீக மரபுகள் மற்றும் மெய்யியல் தத்துவங்கள், சைவ சித்தாந்த நெறிகளின் கலவையாகப் பரிமளிப்பதே இன்றைக்கு நாம் காணும் முருக வழிபாடு. கற்காலத்தில் மனிதன் வேட்டையாடிய பொழுது, பெண்ணைச் சார்ந்த தாய்வழிச் சமூகமாகவே ஆதிமனிதன் வாழ்ந்துவந்தான். பின்னர், அவன் நிலவுடைமைச் சமுதாயமாக மாறிய பொழுது, தந்தைவழிச் சமூகமாக சமுதாய நிலை மாறியது. இந்தச் சமுதாய மாற்றங்கள் முருக வழிபாட்டிலும் எதிரொலிப்பதைக் காணலாம். தொடக்கத்தில் முருகன் கொற்றவை செல்வனாகவே முன்னிறுத்தப்பட்டான், பிற்காலத்தில்தான் சிவன் மைந்தனாக, தகப்பன் சாமியாக முதன்மைப்படுத்தப்பட்டான்.

சங்க காலத்திலேயே முருக வழிபாடு இருவகையாக இருந்ததைத் திருமுருகாற்றுப்படை பதிவு செய்கின்றது. காட்டில் கிடைத்த காந்தள் மலரும் தேனும் தினைமாவும் ஆட்டுரத்தம் கலந்த அரிசியும் படைத்து வேடுவர்கள் பழமுதிர்ச்சோலையில் வழிபட்ட முறையைச்





சொல்கின்றார் நக்கீரர். அதேவேளையில் சுவாமிமலையில் வேதியர்கள் வேள்வி செய்து, தூபமும் தீபமும் காட்டிப் பூசனை செய்த முறைமையையும் பதிவு செய்கின்றார்.

சங்க காலத்திலேயே தமிழ்நாட்டில் முருகனைப் பற்றிய புராணக்கதைகள் உருவானதை பரிபாடலில் பார்க்கலாம். கடுவன் இளவெயின்னாரின் பாடல் குறிப்பிடத்தக்கது.

முருகனின் புராணத்தைப் படிப்பவர்கள் மூன்று கூறுகளை மனதில் வைத்துப் படிக்க வேண்டும். கந்தபுராணத்தில் வரும் கதைகளுக்கு வாழ்வியல் தத்துவம், புராண ரீதியிலான தத்துவம், அறிவியல் ரீதியிலான தத்துவம் என்ற மூன்று கூறுகள் உண்டு. முருகன் ஞானப்பழம் பெற்ற கதை, வள்ளி தெய்வயானை திருமணம், சூரன் வதம் முதலான புராணக்கதைகளை அணுகும்பொழுது இந்த மூன்று கூறுகள் அடங்கிய தத்துவத்தை அக்கதைகளில் ஆராயவேண்டும்.. இதன் மூலமே முருக வழிபாட்டின் உண்மையான நோக்கத்தை உணரலாம்.

## முருகன் அடியார்கள்

முருகன் ஏது பிழை செய்தாலும் ஏழைக்கு இறங்கி தீது புரியாத தெய்வம் .

அடியவர் இச்சையில் எவை எவை உற்றன. அவை தருவித்தறளும் பெருமான்! வேண்டியபோது அடியார் வேண்டிய போகமது வேண்ட வெறாதுதவும் பெருமான்! அவன்,

ஆதியில் அகத்தியருக்கு அருந்தமிழை அருளினான்.

நக்கீரன் மொழிகேட்டு நல் வாழ்வை அருளினான்

முருகம்மையார் ”முருகா முருகா” என்று உருகுவதைக் கேட்டு முக்தியை அருளினான்.

அவ்வைக்கு ஞானப்பழம் அருளினான்

கச்சியப்பர் கவிதையைத் திருத்தி அருளினான்

அருணகிரியை ஆட்கொண்டு அருளினான்

ஊமைக்குழந்தை குமரகுருபரரின் குரல் உலகம் முழுதும் ஓங்கி ஒலிக்க அருளினான்

வண்ணச்சரபருக்கு கௌமார நெறி சொல்லி அருளினான்.

பாலன் தேவராயரின் வயிற்றுவலி தீர்த்து அருளினான்

பாம்பன் குரும குருதாசரின் கனவிலும் நனவிலும் காட்சிதந்து அருளினான்

இராமானந்த சுவாமிகளுக்குச் சிரவை எனும் ஞானபரம்பரை அளித்து அருளினான்

தங்கத்தேர் தந்த வள்ளல் முருகேச முதலியாருக்கு சிங்கமாய்ப் பிள்ளைகள் அருளினான்.



வ ள் ளி ம லை சுவாமிகளின் வருத்தம் நீக்கி அருளினான்.

வ ா ரி ய ா ர் சு வ ா மி க ளு க் கு வ ழி த் து ணை ய ா ய் அருளினான்

இப்படி காலங்கள் தோறும் அடியார்க்கு அருளும் அழகனாக மட்டுமல்ல, அடியார்க்கு அடியாரைக் காக்கும் அழகனுக்கு மட்டுமல்ல, அவன் அடியில்

இருக்கும் யாருக்கும் அருளும் அழகனாக இருப்பவன் முருகன்.

தன்னை எதிர்த்த சூரபத்மனுக்கு அருளவில்லையா? அந்த சூரபதுமனின் ஆணவம் நீக்கி, அவனை சேவல் கொடியாகவும் மயிலாக மாற்றி, உலகமே போற்றும்படி செய்யவில்லையா!

அவனிடம் சண்டையிட்டு பின் சரணடைந்த இடும்பனுக்கு அருளவில்லையா ?

ஆணவம் நீங்கி அன்புவழி செல்லும் ஆன்மா யாராக இருந்தாலும் அருள் செய்வான் இந்த அழகன். அவன், அடியார்க்கு மட்டுமல்ல, அடியாரின் அடியார்க்கு மட்டுமல்ல, யாருக்கும் அருளும் கருணாமூர்த்தி. முருகனை உணர்ந்த ஒவ்வொரு ஆன்மாவுக்கும் அருளும் அழகனாக நிறைவுற நிற்பவன்

## உலகின் மற்ற பகுதிகளில் முருக வழிபாடு

உலகின் மற்ற பகுதிகளிலும் தமிழ் நாட்டில் இருந்ததைப் போலவே முருக வழிபாட்டினை அங்குள்ள மனிதர்கள் மேற்கொண்டதற்கான சான்றுகள் தற்பொழுது கிடைத்து வருகின்றன. அங்கே அவர்கள் மேற்கொண்ட முருக வழிபாடு இயற்கையாகவே தோன்றியிருக்கக் கூடும். அல்லது, வியாபார நிமித்தமாக பயணம் செய்த அக்கால மன்னர்களால் பரவி யிருக்கக்கூடும். உலகின் பெரும்பாலான நாடுகளில் முருகனையொத்த வடிவத்தையும் இயல்பினையும் கொண்ட ஓர் இறை வடிவத்தை அங்குள்ள மக்கள் வழிபட்டார்கள். அயல் நாடுகளில் முருக வழிபாட்டைப் பற்றிய செய்திகளை அடுத்த மாதம் சிந்திக்கவுள்ளோம்.

## நிறைவுரை

தமிழர்கள் முருகனைத் தமிழோடு இணைத்து வழிபட்டார்கள். அவனைப் பரம்பொருளாகப் போற்றினார்கள். பரம்பொருளுக்குள்ள தன்மை யாவும் கொண்ட பெருந்தெய்வமாகவே தமிழர்கள் அவனைக் கொண்டாடுகிறார்கள். ‘கடியுண் கடவுள்’ என்று அவனுக்குப் புதிதாக விளைந்தவற்றைக் காவடியாக எடுத்துச் சென்று படைத்தார்கள்.

முருகன் தமிழோடு மட்டுமல்ல, தமிழர்களின் வாழ்வியலோடும் இரண்டறக் கலந்தான். தமிழ் சித்தர்கள் அவனைச் சித்தர்களின் தலைவனாகவும் யோகிகள் அவனை இராஜயோகியாகவும் புலவர்கள் அவனைத் தலைமைப் புலவனாகவும் மருத்துவர்கள் அவனைப் பவரோக வைத்தியனாகவும் கொண்டாடுகிறார்கள். உலகின் மற்ற பாகங்களில் ஆதியில் தோன்றிய முருக வழிபாடு, பூலோக மாற்றங்களாலும் சமுதாய மாற்றங்களாலும் பிற மதத் தோற்றங்களாலும் நிலை மாறியது. ஆனால், தமிழ் நாட்டினர் மட்டும் முருகனைப் பரம்பொருளாகப் போற்றிய காரணத்தால், தமிழோடு இணைத்த காரணத்தால், தமிழர்களிடமிருந்து பிரிக்க முடியாத ஒன்றாக அவர்களுடைய முருக வழிபாடு மாறியது. கடந்த சில நூற்றாண்டுகளாக தமிழகத்திலிருந்து சென்ற தமிழர்களாலும் குறிப்பாக நகரத்தார் பெருமக்களாலும் , இலங்கைச் சைவர்களாலும் உலகெங்கும் முருக வழிபாடு மீண்டும் பரவுகின்றது. ஆனால், இம்முறை சைவத்தோடு இணைந்து பரவுகின்றது.

“அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருகன்” என்ற நக்கீரரின் கூற்றுப்படி,உலகம் உள்ளவரை, முருக வழிபாடும் உயிர்ப்போடு நம் உணர்வுகளில் இருக்கும் என்பதே உண்மை.

**முருகனருள் முன்னிற்க!**



# கோவிலூர் ஆதீன வெளியீடுகள்
# கோவிலூர் புதையல்கள் - 12

## தவத்திரு காசிகாநந்த சுவாமிகள் இயற்றிய ஸ்தோத்திர ரசமஞ்சரியும், ஓர் அறிக்கையும்

- நூல் அறிமுகம்



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

ஸ்தோத்திர ரச மஞ்சரி என்ற நூல் திருப்பூவண மடாதிபதியாக இருந்த தவத்திரு காசிகாநந்த ஞானசாரிய சுவாமிகளால் எழுதப்பட்டது. இந்நூல் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தொன்பதாம் ஆண்டில், மதுரை ராஜேசுவரி பிரசில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. சிதம்பரம், கோ. சித. மடத்தைச் சார்ந்த ஸ்ரீ சித. நீலகண்ட சுவாமிகளால் இந்நூல் பரிசோதிக்கப்பட்டு பதிப்பிக்கப் பெற்றிருக்கிறது. மேலும் இந்நூலில் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தாறாம் ஆண்டில் அத்வைத மடாதிபதிகளுக்கு அறிவுறுத்தும் படியான செய்திகளை ஓர் அறிக்கை வடிவில் தவத்திரு காசிகாநந்தர் இந்நூலின் பின்னிணைப்பாகத் தந்துள்ளார்.

இந்நூலில் அமைந்துள்ள புனைந்துரை என்ற பகுதி, மிகச் சிறந்த கருத்துகளைத் தருகிறது. இப்பூமியல் வசிக்கும் மக்கள் வீடுபேறு அடைவதற்கான வழிகள் மூன்று. 1. கர்மம், 2. ஞானம், 3. பக்தி. முதலிரண்டும் மக்கள் எல்லோராலும் எளிதில் அடையக் கூடியது அல்ல. மூன்றாவதான பக்தி ஒன்றே அனைவராலும் அடையத் தக்கதாகும். இறைவனை அடையும் பக்தி மார்கமும் மூன்று வழிகளைக் கொண்டுள்ளது.

1. காயிகம் காயம் என்பது உடலைக் குறிக்கும். காயிகம் என்பது உடலால் செய்யப்படும் பக்தி முறையாகும். இதனுள் தானம் செய்வது, தலயாத்திரை செய்வது, திருக்கோயிலுக்குப் பணி செய்வது போன்றன அடங்கும்

2. மாநசிகம் மனத்தால்

செய்யப்படுபவை. மனத்தால் இறைவனை தியானித்தல், புலனடக்கம் போன்றவை மாநசிகம் எனப்படுகிறது.

3. வாசிகம் வாக்கால் செய்யப்படுபவை. இறை மந்திரங்களை ஓதுதல், வேதங்களைப் பாராயணம் செய்தல் தருமங்களைப் பற்றி எடுத்துப் பேசுதல் முதலியவை வாசிகம் எனப்படுகிறது.

இவ்வாசிக பக்தியையே பெருபான்மையான இறை அடியார்கள் பயன்படுத்தி வந்துள்ளனர். இவ் வாசிக பக்தியையே மாணிக்கவாசகரும், ஆழ்வார்களும், அருணகிரி நாதரும், அபிராமி பட்டரும் போன்ற பலரும் பின்பற்றி இருக்கிறார்கள். அப்பெரியோர்கள் பின்பற்றிய வாசிக வழியிலேயே காசிகாந்நத ஞானாசாரியாரும் இறைவனை சொல்மலர்களால் பாடிப் பரவி பக்தி செய்துள்ளார்.

### பெயர்க்காரணம்

பக்தி ரசம் நிறைந்த பாடல்கள் பல எழுதித் தொகுக்கப் பெற்றுள்ளதால், இந்நூல் “ஸ்தோத்திர ரச மஞ்சரி” எனப் பெயர் பெற்றுள்ளது. இந்நூல் மொத்தம் ஆறு பதிகங்களைக் கொண்டுள்ளது.

1. மதுரை பொற்றாமரைக்கரையில் வீற்றிருக்கும் விபூதிக் கணபதியின்மீது முதல் பதிகம்.

2. சீர் வளர் சீர் காசிகானந்த ஞானாசாரியார் ஸ்தாபித்த திருப்பூவண மடத்தில் அமைந்துள்ள மகா கணபதியின் மீது இரண்டாவது பதிகம்

3. திருப்பூவணம் – திருப்பூவணநாதரான சிவபெருமான் மீது மூன்றாம் பதிகம்

4. திருப்பூவணம் – சௌந்தர நாயகி அம்மன் மீது நான்காம் பதிகம்.

5. தனது குருவான சீர்வளர்சீர் வீரசேகர ஞானதேசிகர் மீது ஐந்தாம் பதிகம்

6. மதுரை மீனாட்சி அம்பிகை பதிகம் என இந்நூலின் முதற் பகுதி அமைகிறது.

மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் உள்ள விபூதிக் கணபதி மீது பாடப்பெற்றுள்ள பதிகத்தில் இருந்து ஒரு பாடல் பின்வருமாறு.

சிவனுடைய குமர! தேசிகத் தலைவன் சிவன்கையின் மாங்கனி கொள்ள
அவனுடையதான அவனியைச் சுற்றி அதிவிரைந்தோடியே வருமுன்
தவமுடைய உனது யூக புந்தியின் நீ தாயையும் பிதாவையும் சுற்றி
நவிலுமக்கனி கொள் தாமரைத் தடத்தின் நற்கணபதி நினைத் துதிப்போம்

என்ற பாடல் கணபதி மாங்கனி பெற்ற வரலாற்றையும், பொற்றாமரைத் தடத்தின் அருகில் வீற்றிருக்கும் இக்கணபதியின் பெருமையையும் எடுத்துரைக்கின்றது.

திருக்களர் ஸ்ரீ வீர சேகர ஞான தேசிகர் பதிகம் என்றபத்தில் தன் குருவான சீர் வளர் சீர் வீரப்ப ஞான தேசிக சுவாமிகளின் பெருமைகள் பலவற்றையும் இவர் எடுத்துரைத்துள்ளார். அவர் தனக்கு இட்ட கட்டளையையும் தவத்திரு காசிகாநந்தர் குறித்துள்ளார்.

வளமை செய்வது போல் கநவனின் வந்து வழுக்கிலா நற்கவி புனைக
அளவிலா நூற்களாக்குக என்றுன்

ஆஞ்ஞையை எளியனுக்கு இட்டாய்

களவிலாது உன்தண்ணருளினைக் கொண்டு கணக்கில் நூல இயற்றினன் சீரார்

களரில் வாழ் வீர ஞாதேசிக நின் கடலிணை நினைத்தி நாம் பணிவோம்

என்ற இப்பாடலில் வீரப்ப ஞான தேசிகர் பல நூல்கள் இயற்றத் தனக்குக் கட்டளை இட்டதைக் குறிக்கின்றார். இவர் தன் எளிய நிலையையும் குறிப்பிட்டு, நூல்கள் இயற்றிய நிலையையும் குறிப்பிட்டு இப்பாடலில் பாடியுள்ளார்.

### வேதாந்த மடங்கள் பின்பற்ற வேண்டிய நெறிகள்

1940களில் மடம் தொடர்பான மக்களின் பார்வையையும், அதற்கு மடாதிபதிகள் பின்பற்ற வேண்டிய செயல்கள் குறித்தும் காசிகாநந்த சுவாமிகள் விளக்குவது சிறப்பானது. அத்வைத மடங்களுக்கிடையிலான ஒருங்கிணைப்பை ஏற்படுத்த வேண்டும் என்று அவர் எண்ணியிருப்பது இப்பகுதியில் நன்கு விளங்குகிறது. அத்வைத மடாதிபதிகளுக்கும், சமாதி ஸ்தலங்களில் இருப்பவர்களுக்கும் ஓர் அறிக்கை என்ற தலைப்பில் இப்பகுதி தொடங்குகிறது. இவ்வாறு இந்நூல் இரு பகுதிகளை உடையதாக உள்ளது.

### ஆச்சாரியர்கள் ( குருக்கள்) வகை

குருக்கள் இரண்டு விதமாக இருப்பர் என்கிறார் காசிகாநந்தர். குரங்குக் குட்டியானது, தன் தாயான குரங்கை விடாது வலிந்து கட்டிக் கொண்டு, தாய் சென்ற இடமெல்லாம் செல்வது போல் முதல் வகை குருக்கள் இருப்பர். அதாவது, சீடர்கள் வலிந்து சென்று குருவிற்குப் பணிவிடைகள் செய்து வாழ்வர். மலரினைத் தேடிச் செல்லும் வண்டினைப் போன்று சீடர்கள் இருப்பர். இவ்விதமான சீடர்களைப் பெற்றவர்கள் முதல் வகையிலான குருக்கள்.

இரண்டாவது வகையினர், பூனை தன் குட்டியை வலிந்து கவ்விக் கொண்டு போய் காப்பாற்றும். அது போல தானே சீடர்களைத் தேடிச் சென்று, அவர்கள் விரும்பமின்றி இருப்பினும் வலிந்து உபதேசம் செய்து அச் சீடர்களை சிறப்பானவர்களாக உருவாக்குவது.

### பக்திப் பரம்பரைகள்

பக்திப் பரம்பரைகள் இரண்டு என்றும் குறிப்பிடுகிறார். 1. குரு பக்திப் பரம்பரை, 2. சிவ(கடவுள்) பக்திப் பரம்பரை.

குருவை முதன்மையாகக் கொண்டு, அவர்களைப் பின்பற்றி இறை வழிபாடு செய்யும் சீடர்களின் பரம்பரை குரு பக்திப் பரம்பரை என்று கூறுகிறார். கோவிலூர் சீட பரம்பரையைச் சார்ந்த அனைவரும் இவ்வகையில் அடங்குவர்.

இறைவனை முதன்மையாகக் கொண்டு, அவனை அடைய முயலும் அடியார்கள் சிவ(கடவுள்) பக்திப் பரம்பரை என்று கூறுகிறார். மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், பன்னிரு ஆழ்வார்கள் போன்றோர் இவ்வகையில் அடங்குவர்.

### அத்வைத வேதாந்தப் பெரியோர்களின் பெருமைகள்

இத்தலைப்பில், பிரம்ம கீதை, ஈசுவர கீதை, சசி வந்ந போதம், வைராக்கிய தீபம் போன்ற நூல்களிலிருந்து சில பாடல்களைக் எடுத்துக் காட்டி ஆன்மீகப் பெரியோர்களின் பெருமைகளை

விளக்குகிறார்.

### குருவிற்கு சமாது வைத்தல்

பல பெருமைகள் கொண்ட, குருமார்கள், வேதாந்த விழுப்பொருள் அடைந்தோர் நிறைநிலை பெறும்போது சமாது வைப்பது பற்றியும் இந்நூலில் குறிப்பிடப்படுகிறது. மறைந்த பின், அவர்களது தேகத்தை சமாது வைத்து, அதன் மேல் கட்டடம் கட்டி வைப்பது சமாதி என்று அழைக்கப்படுகிறது. மேலும், அதற்கு, அதிஷ்டானம், கோவில், சமாதிக் கோவில், ஆலயம் என்றும் பெயர்கள் உண்டு என்கிறார்.

### மடங்கள் உருவான காரணம்

மடங்களின் உருவானதற்கான காரணமாக காசிகாந்நதர் குறிப்பிடுவது, ஆன்மீகப் பெரியார்களின் சமாதுகளுக்கு, பூசை முதலிய செயல்களைச் செய்பவர்கள் இருப்பதற்கு, அவர்களாலும், அவர்களது வழித் தோன்றல்களாலும் கட்டடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. அதனையே, நாம் ஆசிரமம் என்றும் மடம் என்றும் மடாலயம் என்றும் அழைக்கிறோம் என்று சிறந்த விளக்கத்தினைத் தருகிறார்.

### வேதாந்த மடங்கள் பொதுச் சொத்து அல்ல

மேற்கண்ட சமாதுகளும், அதன் அருகில் கட்டப்பட்ட மடங்களும், அங்கு இருந்த ஆன்மீகப் பெரியாரின் ஒழுக்கம், செயல்பாடுகள் போன்றவற்றை நேரில் கண்ட, அவர்களின் வழித் தோன்றல்களால் கொடுக்கப்பட்ட பொருள்களின் மிகுதியால் கட்டப்பட்டவை. அது அவர்களே ஆசைப்பட்டு, பாதகாணிக்கையாகக் கொடுக்கப்பட்டவை.

இப்படிப்பட்ட நமது வேதாந்த மடங்கள் போன்றவை, மதம் பிரச்சாரம் செய்வதற்கோ, தர்மம் பிரச்சாரம் செய்வதற்கோ, ஒருவரால் கட்டப்பட்டு, டிரஸ்டி, ஏஜண்ட், மானேஜர் ஆகியோரால் நிர்வகிகப்படுகின்ற மடங்களோ, ஆலயங்களோ அல்ல என்பதை உணர வேண்டும் என்று வேதாந்த மடாதிபதிகளுக்கு உரைக்கிறார்.

இம்மடங்கள் தனிப்பட்ட ஒருவருக்கே உரிமை உடையவை என்பதை அனைவரும் உணர வேண்டும். மேலும், வக்கீலுக்கு, கேசுக்குப் பீஸ் கொடுத்து விட்டு, கேஸ் ஜெயிக்கவில்லையானால் பீஸை திருப்பிக் கேட்பது எவ்வளவு அறியாமையோ அது போன்றது பாதகாணிக்கையாகக் கொடுத்த பொருளைத் திரும்பக் கேட்பது என்று சான்றுடன் விளக்குகிறார்.

இவ்வாறு மடங்கள், 1. பொதுவானவை, 2. தனி பட்ட ஒருவருக்கே உரிமையானவை என இரண்டாகவும், குருக்கள் இரண்டு விதமாகவும் இருப்பதால், இதனை வேதாந்த மடாதிபதிகள் அனைவருக்கும் விளங்குபடி எடுத்துரைக்க வேண்டும் என்று வேண்டுகிறார்.

இவ்வாறு தமிழ்நாட்டில் உள்ள அத்வைத மடங்கள் என்று 74 மடங்களின் பெயர்களைப் பட்டியலிட்டுள்ளார். மேலும் 26 மடங்கள் இருப்பதாகவும், மொத்தம் அத்வைத மடங்கள் 100 என்று குறிப்பிடுகிறார்.

நூலைப் படிப்பதற்கான தொடுப்பு https://archive.org/details/Acc.No.10201StotraManjari1949

# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம்

## மனிதன் அடி பொருந்தும் அன்பு



- வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன்

நம்மைப் பெற்றுப் பாலூட்டிக் காப்பாற்றும் தாயை விட, நமக்கு வேண்டியவற்றையெல்லாம் வாங்கி அரவணக்கும் தந்தையைவிட ஆண்டவன் பெரியவன். நம் தாய் தந்தையரிடத்தில் நமக்கு இயற்கையாகவே ஒரு பாசம் உண்டாகிறது. தாய் அடித்தாலும் குழந்தை அவளிடமே ஒட்டிக் கொள்கிறது.

இறைவனிடம் அப்படி ஒரு பாசம் நமக்கு இருக்க வேண்டும். "பாசம் பரஞ்சோதிக்கு அன்பாய்" என்று திருவெம்பாவையில் வருகிறது. உண்மையான பக்தர்கள் இன்பம் வந்தாலும் துன்பம் வந்தாலும் அவனோடு பின்னிப் பிணைந்து கிடப்பார்கள்; அவன் அடியையே பற்றிக் கொண்டிருப்பார்கள். "நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்று இருப்பார்கள். அவன் திருவடியையே புகலாக அடைந்து பற்றிக் கிடப்பதனால்தான் அடியார் என்ற பெயர் வந்தது.

வழிபாட்டை வியாபாரமாகப் பண்ணுகிறவர்கள் இறைவனுக்கு அபிஷேகம் செய்வார்கள்; அர்ச்சனை செய்வார்கள்; தம்முடைய செல்வச் செழிப்பை விளம்பரப் படுத்தும் வகையில் அலங்காரம் செய்வார்கள். இவ்வளவும் இறைவனுக்கு லஞ்சம் கொடுத்து ஒன்றைப் பெறுவதற்காகச் செய்கிற காரியங்கள். அவர்கள் இவ்வாறு விளம்பரத்துக்காகச் செய்யும் போலிப் பக்தியைக் கண்டு இறைவன் சிரிக்கிறானாம். அவர்களுடைய நெஞ்சிலேயே அவன் இருக்கிறான். ஆகையால் அந்த நெஞ்சில் என்ன எண்ணுகிறார்கள் என்பதை அவன்

நன்றாக அறிந்து கொள்கிறான். 'நம்மைப் பூவாலும் நீராலும் ஏமாற்றப் பார்க்கிறார்கள்' என்று அவன் அங்கிருந்தபடியே சிரிக்கிறானாம்.

"பொக்கம் மிக்கவர் பூவும்நீ ருங்கண்டு
நக்கு நிற்பர் அவர் தம்மை நாணியே"

என்று அப்பர் சுவாமிகள் பாடுகிறார். காரைக்காலம்மையார் எல்லோரையும் விடப் பெரிய பணக்காரர்கள் செய்யும் ஆரவாரத்தை மனக் கண்ணால் பார்க்கிறார். வானவர்கள் பெரியவர்கள்; பணத்தால் பெரியவர்கள்; பதவியினால் உயர்ந்தவர்கள். தம்முடைய நிலைக்கு ஏற்றபடிதான் பெரிய மாலைகளைப் புனைந்திருக்கிறார்கள்." என்று நாம் வியக்கிறோம். ஆனால் காரைக்கால் அம்மையார் என்ன சொல்கிறார்? நாம் புறக் காட்சியையே கண்டு மயங்குகிறவர்கள். அம்மையாரோ உள்ளத்தினுள்ளே புகுந்து சோதனை போடுகிறவர். "எல்லாம் வெளி வேஷம் !உள்ளே ஒன்றும் இல்லை. அந்த மாலைகளால் ஆண்டவன் அடியை அலங்காரமா செய்கிறார்கள்? அந்த அடிகள் கண்ணுக்குத் தெரியாமலே மறைத்து விட்டார்கள். கருத்திலும் அந்த அடிகளை அவர்கள் வைக்கவில்லை. மாலை பொருந்தியதே ஒழிய மனம் பொருந்தவில்லை. அவ்வாறு பொருந்துவதற்குரிய சக்தி அவர்களிடம் இல்லை. அதற்கு எவ்வளவோ காலம் பழக வேண்டும். அடியோடு ஒட்டி உறவாட வேண்டும். அவர்கள் அந்தத் திறமை இல்லாதவர்கள்; மாட்டாதவர்கள் என்கிறார்.

நினைந்திருந்து வானவர்கள் நீள் மலரால் பாதம்

புனைந்தும் அடிபொருத்த மாட்டார்.
பிறகு அம்மையார் தம்மையே சோதனை போட்டுக்கொள்கிறார். அவர்கள் அடியை மலராற் புனைந்தும் அடியோடு பொருந்துவதில்லை. நானோ?"
அவரும் நினைந்திருக்கிறார். அவர்களைப் போல அல்ல. தம் பதவியையும் தமக்குக் கிடைக்க வேண்டிய நன்மைகளையும் இறைவனிடம் அவற்றைப் பெறலாம் என்பதையும் தேவர்கள் நினைத்தார்கள். அவர்கள் நினைத்தது ஒன்றல்ல; பல. அவற்றை நினைந்து நினைந்து தயங்கியிருந்து பிறகே பூசை செய்யப் புகுந்தார்கள். அம்மையார் அப்படியா நினைந்திருந்தார்? அவர் தாம் நினைந்தபடியே முன்பே சொல்லி யிருக்கிறார்.

ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்தொழிந்தேன்,
ஒன்றேஎன் உள்ளத்தின் உள்ளடைத்தேன்

என்று சொல்லியிருக்கிறாரே, ஆகவே பலவற்றையும் நினைந்திருந்த தேவர் நிலை வேறு; ஆண்டவனையே நினைத்திருந்த அம்மையார் நிலை வேறு.
இறைவனை நினைந்து நினைந்து வாயார அவன் திருநாமங் களையும் இயல்புகளையும் கூறிக் கூறிப் புகழ்பவர் அம்மையார். ஆண்டவனுடைய திருவுருவத்தை மனத்தில் வைத்துத்

தியானித்து அவன் அங்கங்களின் எழிலை வாயாரச் சொல்லிப் பாடுகிறவர்.

'மின்னலைப் போன்ற சடையையுடையவனே, பெரிய சடையையுடையவனே! என்று ஏத்துகிறவர்; வேதம் ஓதும் எம்பெருமானே, வேதியனே என்று துதிக்கிறவர். அப்படிப் பாடும்போதெல்லாம் அவன் திருவுருவத்திலும் திருவடியிலும் நெஞ்சு பதிந்து நிற்கிறவர். தேவர்கள் மலரை இட்டுப் பூசை செய்யும் மலர் இடும் திருவடியில் மனத்தைப் பொருத்துவதில்லை. அம்மையார் பூசை செய்யவில்லை. மனத்தால் தியானிக்கிறார்; வாயினால் ஆண்டவனைத் துதிக்கிறார். அவர் உள்ளம் இறைவன் திருவடியிலே பொருந்தியிருக்கிறது.

'சிவபெருமான் தேவர்கள் இடும் மாலைகளையும் புனைந்து கொள்கிறான்; அம்மையாருடைய அன்பையும் ஏற்றுக்கொள்கிறான். வெளிப் பார்வையில் தேவர்கள் நினைப்பதும் இருப்பதும் பிறகு மலரால் பாதத்தைப் புனைவதும் சிறப்பாகத் தோற்றுகின்றன. ஆனால் அவர் உள்ளம் இறைவன் அடியில் பொருந்தவில்லை. அம்மையாரோ நினைந்திருந்து இறைவனை வாழ்த்துகிறார்.

இறைவன் இருவருடைய இயல்பையும் உணர்ந்தவன். தேவர்கள் ஒரு பயனை எதிர்நோக்கி மனம் பொருந்தாமல் வழிபடுகிறார்கள். அம்மையாரோ மனம் பொருந்தித் தியானித்து வாழ்த்துகிறார். அப்படியானால் அம்மையாருக்கு என்ன செய்வான் இறைவன்? நிச்சயமாக அருள் புரிவான்;பிறப்பின்றிச் செய்து, விடுவான். அம்மையார் இப்படிச் சொல்லவில்லை. "இனி என்ன செய்வேனோ?"என்று ஐயப்படுபவர் போல முடிக்கின்றார். இதில் நமக்கு ஓர் ஐயமும் இல்லை. உறுதியாக இறைவன் அருளைப் பெற்றவர் அவர். இனியும் பேரருளைப் பெறப் போகிறவர்.

பின், ஏன் அவர் ஐயப்பட வேண்டும்? அதுதான் அன்பின் இயல்பு. அவன் திருவுள்ளம் எதுவோ?' என்று ஏங்குவதே அன்பின் இலக்கணம். அம்மையார் கூறுவதைக் கேட்கலாம்.

**நினைந்திருந்து வானவர்கள்நீள்மலரால் பாதம்**

**புனைந்தும் அடிபொருந்த மாட்டார்ஷெ நினைந்திருந்து**

**மின்செய்வார் செஞ்சடையாய், வேதியனே, என்கின்றேற்கு**

**என்செய்வான் கொல்லோ இனி?"**

வானவர்கள் நினைந்து, பிறகு சிறிது யோசனை பண்ணிப் பொறுத்திருந்து பிறகே அடி புனைவர். நினைந்து இருந்து என்று பிரித்து, இருந்து என்பதற்குக் கொஞ்சம் பொறுத்துப் பார்த்திருந்து என்று பொருள் கொள்ளவேண்டும். வானவர்கள் நினைந்து, பிறகு சிறிது யோசனை பண்ணிப் பொறுத்திருந்து பிறகே அடி புனைவர். நினைந்து இருந்து என்று பிரித்து, இருந்து என்பதற்குக் கொஞ்சம் பொறுத்துப் பார்த்திருந்து என்று பொருள் கொள்ளவேண்டும். தேவர் அடி பொருந்த மாட்டார் என்றதால் அம்மையார் அடி பொருந்தியவர் என்பது தானே தெளிவாகும்.

இறைவன் அடி உள்ளத்திற் பொருந்த அன்பு செய்கிறவர்களுக்கு அருள்பவன் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 15 ஆம் பாட்டு.

## திருவடித் தீர்த்தம் பெற்றுய்ந்த

# தொண்டரடிப்பொடியார்



**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

திருப்பள்ளி எழுச்சி பாடித் திருவரங்கத் திருமாலைத் துயிலெழுப்பியவர். திருஅரங்கனைப் போலத் திருவரங்கத்தை மட்டுமே பாடியவர். ஆனால் பத்தினி ஆழ்வாரென்று போற்றப்பட்ட இவரும் வாழ்க்கையின் மாயையில் வீழ்ந்து அதன் பின் திருமகளின் கருணையால் மீண்டு எழுந்து அடியார்களின் திருவடித் தீர்த்தம் பெற்றுய்ந்தவர். அவர் அரங்கனின் அடியவர்க்கெல்லாம் அடியவராய்த் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட விப்ரநாராயணர் என்னும் தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் கதையைப் பார்ப்போம்.

எட்டாம் நூற்றாண்டில் தஞ்சையம்பதிக்கு அருகில் உள்ள திருமண்டங்குடி என்ற ஊரில் பிறந்தவர் விப்ரநாராயணர். விஷ்ணுவைப் புகழ்ந்து பாடும் விப்ராமக்கள் என்று அழைக்கப்பட்ட பிரிவில் பிறந்ததால் இவருக்கு விப்ரநாராணயர் என்னும் பெயர் சூட்டப்பட்டது. தந்தை வேதவிசாரதரால் உரிய காலத்தில் உபநயனம் செய்விக்கப்பட்டார்.

திருமாலின் மேல் கொண்ட பிரேமையினால் இவருக்குத் திருமணத்தில் விருப்பமில்லாமல் இருந்தது. எனவே திருமாலின் திவ்யதேசங்களைத் தரிசித்து வரலாம் என்ற எண்ணத்தில்தான் இவர் புறப்பட்டார். ஆனால் திருவரங்கத்தை அடைந்ததுதான் தாமதம். அங்கே பாம்பணைமேல் கம்பீரமாகப் பள்ளி கொண்ட அரங்கனைக் கண்டார். தன்னை மறந்தார். ஊரிலென் காணியில்லை, உறவு மற்றொருவரில்லை. பாரில் உன் பாதம் பற்றினேன் பரமமூர்த்தி என்று அவனுக்கே அடிமையானார்.

மேகங்களை எட்டிப் பிடிக்கக் கூடிய அளவு உயரமாய் வளர்ந்திருந்த விருட்சங்களும், செடிகளும் கொடிகளும் பின்னிப் பிணைந்திருக்க, அங்கே வண்டுகள் முரல, குயிலினம் கூவ, மயிலினம் ஆட,



ஸ்ரீ தொண்டரடிப் பொடியாழ்வார் மண்டங்குடி
அவதாரம் மார்கழி கேட்டை

அண்டர்கோன் அமர என்று திருவரங்கமே அவருக்கு ஒரு சோலையாகக் காட்சி அளித்தது. இவ்வளவு ஏன் பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண் அச்சுதா அமரா் ஏறே, ஆயர்தம் கொழுந்தே என்னும் இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே என்றெல்லாம் அரங்கனின் மேல் பிரேமை கொண்டு அங்கேயே இருந்துவிட்டார்.

வனமாலையின் அம்சம் ஆனதாலோ என்னவோ இவருக்கு வனப்பான நந்தவனம் அமைத்துப் பெருமாளுக்கு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் பாமாலையோடு பூமாலை கட்டித் தரும் கைங்கர்யத்தை மேற்கொண்டார். நாளும் பொழுதும் இப்படியே போயிருந்தால் நலமாய் இருந்திருக்கும். பாசுரங்களைப் படைத்திருந்த விப்ரநாராயணருக்கும் ஒரு சோதனை வந்தது பெண் ரூபத்தில். உத்தமர்கோயில் என்னும் ஊரைச் சேர்ந்த தேவதேவி சோழனின் உறையூர் அரண்மனையில் நடனமாடித் திரும்பிக் கொண்டிருந்தாள். வழியில் விப்ரநாராயணரின் மனதைப்போலச் செழித்துப் பூத்திருந்த நந்தவனம் அவள் கண்ணில் பட்டது.

அதன் நறுமணத்திலும் சௌந்தர்யத்திலும் மயங்கியவள் உள்ளே நுழைந்தாள். நந்தவனத்தினை உருவாக்கிய விப்ரநாராயணரைப் பார்த்தாள். அவரோ பெருமாளுக்கான துவளத் தொண்டில் ஈடுபட்டு நினைவெல்லாம் திருமாலாகத் திருமாலையைத் தொடுத்துக் கொண்டிருந்தார். திருமாலைத் தவிர வேறு ஒருவரையும் கண்கொண்டு நோக்காத அவரைத் தன்வயப்படுத்த எண்ணி அவர் பாதம் பணிந்தாள் தேவதேவி.

தன் குலத் தொழிலால் ஏற்பட்ட இழிவு நீங்கத் தானும் அங்கே தொண்டு புரிய விரும்புவதாகக் கூற விப்ரநாராயணரும் அனுமதித்தார். நந்தவனத்தில் பூப்பறித்தல், மாலை தொடுத்தல், செடிகளுக்கு நீரூற்றுதல், தூய்மைப் படுத்துதல் என அவள் ஈடுபட விப்ரநாராயணரும் தனக்குக் கிடைத்த உணவின் ஒரு பகுதியைத்

தொண்டு செய்து வந்த அவளுக்கு அளித்து வந்தார். நல்லவள் என நினைத்து அவர் நம்பிக்கை கொண்டபின் ஒரு நாள் இனிமையாகப் பேசி அவர் உள்ளத்தைக் கவர்ந்து தன் வயமாக்கிக் கொண்டாள்.

இப்படி விப்ரநாராயணரின் பொருளை எல்லாம் கவர்ந்தபின் சிலகாலம் கழித்துத் தேவதேவி தன் ஊர் போய்ச் சேர்ந்தாள். அவளின் பிரிவை ஆற்றாமல் விப்ரநாராயணர் அவள் வீடு தேடிச் சென்றாள். பொருளிலாரை அனுமதிக்காத அவள் தாய் அவரை வெளியேறச் சொல்ல அவரோ மனம் வருந்தித் தோட்டத்தில் சென்று அமர்ந்தார்.

அக்கணம் அவரை ஆட்கொள்ள விரும்பிய திருமகளின் கோரிக்கையால் திருமால் ஒரு திருவிளையாடலைச் செய்தார்.

தன் அடியார் ஒருவர் மூலம் திருவரங்கக் கோயிலின் பொன் வட்டில் ஒன்றைத் தேவதேவியின் தாயிடம் விப்ரநாராயணர் சார்பாகச் சேர்ப்பித்தார். உடனே தேவதேவியின் தாய் அவரை உள்ளே அனுமதிக்க விப்ரநாராயணர் களிபேருவகை கொண்டு தேவதேவியைச் சேர்ந்தார்.

பொழுது விடிந்தது. அங்கோ கோயிலில் பொன் வட்டிலைக் காணவில்லை எனத் திருக்கோயிலில் ஒரே அமளி துமளி. சோழனின் சபையில் அர்ச்சகர், பரிசாகரர் என அனைவரும் விசாரிக்கப்பட்டுத் தண்டிக்கப்பட்டனர். ஆனாலும் வட்டில் கிடைக்கவில்லை. ஊரெங்கும் ஒற்றர் உலாவினர். ஒரு ஒற்றன் கண்டுபிடித்தான் அவ்வட்டில் தேவதேவியின் வீட்டில் இருப்பதை. உடனே அரசர்க்குத் தெரிவிக்க அவரோ உடனே விசாரணை மேற்கொண்டார்.

கோயிலில் திருடிய பொருளை வாங்கியதற்காகத் தேவதேவியின் தாய்க்கு அபராதம் விதித்த சோழன் பொன் வட்டிலைத் திருடியதாகக் கூறி விப்ரநாராயணரைக் காராக்ரகத்தில் அடைத்தான். விப்ரநாராயணரின் பக்தியை அறிந்த திருமகள் திரும்பத் திருமாலிடம் பரிந்து பேச அவர் அரசனின் கனவில் தாமே அப்பொருளைக் கொடுத்ததாக உரைத்தார்.

விழித்து எழுந்த சோழன் தன் தவறுணர்ந்து விப்ரநாராயணரை விடுவித்தான். ஆனாலும் அவருக்குத் தானும் மோகமெனும் மாயையில் வீழ்ந்து அரங்கனை மறந்தது துன்பமளிக்கப் பெரியோர்களிடம் ப்ராயச் சித்தம் வேண்டினார். திருமால் அடியவர்களின் திருவடித் தீர்த்தமே இதைத் தீர்க்கும் என்று கூறப்பட அரங்கனின் அடியவர்களின் திருவடித் தீர்த்தம் பெற்றுப் பருகி உய்ந்தார். இவ்வாறு தொண்டர்களின் அடிப்பொடியாக அவர் ஆனதால் தொண்டரடிப்பொடி என்றும் அழைக்கப்பட்டார்.

அப்படிப்பட்ட உத்தம அடியாரைக் கண்டதால் தேவதேவியும் தன் பொருளனைத்தையும் அரங்கனுக்கே அர்ப்பித்துத் திருக்கோயிலில் திரு அலகிடுதல், மெழுகுதல், கோலமிடுதல் ஆகிய பணிகளைச் செய்து நற்கதி அடைந்தாள். தன் திருவரங்கத்து நந்தவனத்துக்குத் திரும்பித் துவளத் தொண்டில் ஈடுபட்டுத் திருப்பள்ளி எழுச்சி, திருமாலை போன்ற பாமாலைகளால் மங்களாசாசனம் செய்து திருவரங்கனைப் பள்ளி எழுந்தருளப் பாடியவர் விப்ரநாராயணர்.

## சிவாலயங்களின் சிறப்புகள் - 11



சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

வே.இராமசாமி, B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

# வைத்தீஸ்வரன் கோயில்

### பகுதி – 2

**வைத்தீஸ்வரன் கோயில்**

**திருத்தல பெருமைகள்**




1. மூலவர் வைத்தியநாதருக்கு சித்தர்கள் அமிர்தத்தால் அபிஷேகம் செய்து வழிபட்டனர் அப்பொழுது அந்த அமிர்தத்தில் இருந்து சிந்திய துளிகள் இத்திருகுளத்தில் சேர்ந்து சித்தாமிர்த தீர்த்தம் என்று அழைக்கப்பட்டு இதில் நீராடுபவர்களுக்கு சகல விதமான நோய்களும் தீர்ந்து விடும் என்ற நம்பிக்கை இருக்கிறது

2. சதானந்த முனிவரின் சாபத்தால் இந்த திருக்குளத்தில் தவளைகள் பாம்புகள் இருப்பதில்லை

3. வைத்தீஸ்வரன் கோயிலுக்கு புள்ளிருக்கு வேளூர் என்ற பெயரும் உண்டு.புள் – சடாயு என்ற பறவையும், இருக்கு – இருக்கு என்ற வேதமும் வேள் – முருகப்பெருமானும், ஊர் – சூரியனும் இறைவனை வழிபட்டு அருள் பெற்ற காரணத்தால் இத்தலப்பெயர் புள்ளிருக்கு வேளூர் என்று பெயர் வந்தது.

4. இங்கு புற்று மண், அபிஷேக தீர்த்தம், வேப்ப இலை, அபிஷேக சந்தனம், அபிஷேக விபூதி இவைகளை

கொண்டு "திருச்சாந்து' எனப்படும் உருண்டை தயாரிக்கப்படுகிறது. 4448 வகையான வியாதிகளை தீர்த்து வைக்கும் மருத்துவத்தின் தலைமை பீடம் இது. இதைச் சாப்பிட்டால் தீராத நோய்கள் குணமாகும் என்பது நம்பிக்கை.

5. தோல் நோய்களுக்கு, இங்குள்ள புனுகு எண்ணெய் வாங்கி தேய்த்து நீராடுகின்றனர்

6. முருகப்பெருமான் இறைவனை வழிபட்டு சூரனை அழிக்க வேல் வாங்கிய தலம்

7. செவ்வாய் தோஷ நிவர்த்தி ஸ்தலம். இங்கு உள்ள அங்காரகனை வழிபட்டு செவ்வாய் தோஷம் உள்ளவர்கள் நிவர்த்தி செய்து கொள்ளலாம்

8. இத்தலத்தில் சம்பாதி சடாயு என்ற கழுகரசர்கள் இறைவனை வழிபட்டு அருள் பெற்றுள்ளனர். சடாயுவின் வேண்டுகோளின்படி இராமபிரான் இத்தலத்தில் (விபூதி குண்டத்தில்) சிதையடுக்கிச் சாடாயுவின் உடலை வைத்து தகனம் செய்ததனால் இவ்விடம் சடாயு குண்டம் எனப்பட்டது

9. வைத்தியநாதருக்கும் தையல் நாயகிக்கும் செல்லப்பிள்ளையாதலால், இங்குள்ள முருகன் "செல்வ முத்துக்குமாரர்' என அழைக்கப்படுகிறார். சூரபத்மனை அழிப்பதற்காக இத்தல இறைவனை பூஜித்து வரம் பெற்றுள்ளார். செல்வமுத்துக்குமாரர் சன்னதியில் தினமும் நடக்கும் அர்த்தஜாம பூஜையின் போது புனுகு, பச்சைக்கற்பூரம், சந்தனம், எலுமிச்சை, பன்னீர், புஷ்பம், பால் சாதம், பால் ஆகியவற்றுடன் விசேஷ பூஜை செய்யப்படும்.

10. வைத்தியநாதருக்கும் தையல் நாயகிக்கும் செல்லப்பிள்ளையாதலால், இங்குள்ள முருகன் "செல்வ முத்துக்குமாரர்' என அழைக்கப்படுகிறார். சூரபத்மனை அழிப்பதற்காக இத்தல இறைவனை பூஜித்து வரம் பெற்றுள்ளார். செல்வமுத்துக்குமாரர் சன்னதியில் தினமும் நடக்கும் அர்த்தஜாம பூஜையின் போது புனுகு, பச்சைக்கற்பூரம், சந்தனம், எலுமிச்சை, பன்னீர், புஷ்பம், பால் சாதம், பால் ஆகியவற்றுடன் விசேஷ பூஜை செய்யப்படும்முருகன் திருவடியில் சாத்தப்படும் சந்தனத்தை வாங்கி சாப்பிட்டால் குழந்தை பாக்கியம் உண்டாகும். முருகனுக்கு முக்கியத்துவம் உள்ள தலம் என்பதால், இங்கு அனைத்து விழாக்களும் முத்துக்குமார சுவாமிக்கு தான். தினமும் காலையிலும், அர்த்தஜாம பூஜையின் போதும் முதலில் முருகனுக்கு பூஜை செய்த பிறகே, சிவனுக்கும் அம்மனுக்கும் பூஜை நடக்கும். முத்துக்குமாசுவாமிக்கு தைமாதம் செவ்வாய்கிழமை ஆரம்பித்து 10 நாள் விழா நடக்கும். பங்குனியில் கோயிலின் பிரமோற்ஸவம் 28 நாள் நடைபெறும்.

11. இத்தலத்தில் நவகிரகங்கள் வரிசையாக இருக்கும். எல்லா தலங்களிலும் சுவாமிக்கு முன்புற பிரகாரத்தில்தான் இருக்கும். ஆனால் இங்கு மட்டும் நவகிரகங்கள் சுற்றுப்பிரகாரத்தில் சுவாமிக்கு பின்புறம் உள்ளது.

12. ஸ்ரீ ராமர் இலட்சுமணன் மற்றும் சப்த ரிஷிகளும் இந்த தலத்திற்கு வந்து வைத்தியநாதரை வணங்கி அருள் பெற்றார்

13. தையல் நாயகி அம்மனை வணங்கினால் குழந்தைகளுக்கு உண்டாகும் பாலதோஷம் நீங்கும்.

14. மருத்துவக் கடவுளான தன்வந்திரி

பகவானுக்கு தனி சன்னதி உள்ளது

15. இந்த ஸ்தலத்து இறைவன் சுயம்பு மூர்த்தியாக அருள் பாலிக்கிறார். இங்கு உள்ள ஐந்து கோபுரங்களும் ஒரே நேர்கோட்டில் அமைந்துள்ளது

16. குழந்தையான முருகப்பெருமானை மகிழ்விக்க இங்கு யானை ஓட்டம் என்ற விளையாட்டு காட்டும் நிகழ்வு சிறப்பாக நடைபெறுகிறது

17. ஆண்டுத் திருவிழா (பிரம்மோற்சவம்) ஒவ்வொரு ஆண்டும் பங்குனி மற்றும் தை (தமிழ் மாதங்கள்) மாதங்களில் கொண்டாடப்படுகின்றது. கார்த்திகை மாதத்திலும் விழா எடுக்கப்படுகின்றது. தமிழ்க் கடவுளாம் முத்துகுமாரசுவாமிக்கு தனி விழாவாக அமாவசை அல்லது பௌர்ணமிக்குப் பின்வரும் காலத்தன்று (சஷ்டியன்று) விழா எடுக்கப்படுகின்றது.

18. ஆடிப்பூரம், நவராத்திரி, கிருத்திகை, தை மாதத்தில் முத்துக்குமார சுவாமிக்குத் திருவிழா, பங்குனி பெருவிழா பங்குனி உத்திரத்தின் போது நாய் ஓட்டம், நரி ஓட்டம் இந்த நிகழ்விற்கு ஏராளமான பக்தர்கள் வருகை தருகின்றனர்.

19. நாடி ஜோசியத்தின் பாரம்பரியத்திற்குப் பெயர் பெற்றது இந்த வைத்தீஸ்வரன் திருக்கோவில், அகத்தியர் அருளிய நாடி ஜோசியத்தை நம்பி இந்த கோவிலுக்கு வந்த பக்தர்கள் தங்களது எதிர்காலத்தைப் பற்றித் தெரிந்து கொள்கிறார்கள். மேலும் இந்த உலகில் உள்ள எல்லா மக்களையும் வசீகரிக்கக் கூடிய சக்தி இந்த கோயில்களுக்கு உள்ளதால், நாடி ஜோசியம் பார்த்து பலன் பெற்றவர்களும் உள்ளனர்

20. இரண்டு கொடி மரம் உள்ள திருத்தலம் இது.

# நல்வழி பாடல்கள்

ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்
இருநாளுக்கு ஏலென்றால் ஏலாய் ஒருநாளும்
என்நோ(வு) அறியாய் இடும்பைகூர் என்வ யிறே
உன்னோடு வாழ்தல் அறிது

**விளக்கம்:** ஒரு நாள் உணவு வேண்டாம் அமைதியாக இரு என்று சொன்னால் வயிரே நீ கேட்க மாட்டேன் என்கிறாய். சரி இன்று உணவு அதிகமாக கிடைக்கிறது ஆகையால் இரண்டு மூன்று நாட்களுக்கு தேவையான உணவை இன்றே நிரப்பிக் கொள் என்றால் அதையும் செய்ய மாட்டேன் என்கிறாய். நாள் தவறாமல் ஒவ்வொரு வேளையும் உன்னையை நிரப்புவதே பெரும் வேலையாக இருக்கிறது , உன் தேவைக்காகவே பலருடன் போராட வேண்டி இருக்கிறது. வயிறே! உன்னோடு வாழ்வது துன்பத்தை தருகிறது.

***********

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழும் அன்றே ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு

**விளக்கம்:** ஆற்றங்கரையில் உள்ள மரம், அரச வாழ்க்கை போகம் ஆகியவை நிலை யில்லாமல் அழிந்து விடும். உழுதுண்டு வாழும் வாழ்வை விட மேலான வாழ்க்கை வேறு ஒன்று இங்கு இல்லை, மற்ற வேலைகள் அனைத்தும் உழவை விட குறைவானவை தான்.

## சிற்றுலா

# வேதாரண்யம்





**திருமதி லக்ஷ்மி ரவி,**
**நாகப்பட்டிணம்**

சிற்றுலாவில் தொடர்ந்து காணக் கிடைத்த பெரிய தலம் 'வேதாரண்யம்.' வேதம் + ஆரண்யம். வேதாரண்யம். ஆரண்யம் என்றால் காடு. வேதங்களே காடுகளாக நிற்க அதன் நடுவே பெருமான் எழுந்தருளி இருக்கிறார். அங்கே எழுந்தருளியுள்ளவர் வேதநாயகி அம்பாள் சமேத 'வேதாரண்யேஸ்வரர்'.

இக்கோவிலுக்குள் நுழையும் முன் மணிகர்ணிகை தீர்த்தம் என்ற பெயர் கொண்ட ஒரு பெரிய குளம் இருக்கிறது. பறவைகள் சரணாலயத்தில் பறவைகள் ஒன்றையுமே பார்க்கக்கிடைக்காமல், இக்கோவிலுக்கு வந்த எங்களுக்கு வரப்பிரசாதமாக இருந்தன குளத்தங்கரையில் இருந்த வாத்துகள்.

நாகப்பட்டிணம் மாவட்டத்தில் எல்லா நீர் நிலைகளும் உப்பு நீராக இருக்க, இந்த மணிக்கர்ணிகை தீர்த்த நீர் மட்டும் நல்ல சுவையுடன்இருக்கிறது. இந்த நன்னீரைத் தான் லிங்க அபிஷேகத்திற்குப் பயன்படுத்துகிறார்கள்.



இராமர் சீதை இருக்கும் படங்களிலும் சீதை, இராமனின் இடது புறமும், லக்ஷ்மணன் வலது புறமும் இருப்பதைக் காணலாம். அர்த்தனாரீஸ்வரரும் தனது இடது புறத்தைத்தான் உமைக்குக் கொடுத்திருப்பார். வலப்புறம் இடப்புறம் என்ற இந்த செய்தி எனக்குப் புதிதாக இருந்தது.

வழக்கமாக சிவன் கோவில் என்றால் சிவலிங்கத்திற்குத்தான் வழிபாடு இருக்கும். அதே போலத்தான் இங்கும். சுயம்புவாக உருவான லிங்கத்திற்கு வழிபாடு நடக்கிறது. அதோடு, திருமணம் முடிந்த பின் கயிலாய மலையில் வீற்றிருக்கும் சிவன், பார்வதியின் கல்லாலான உருவங்கள், அந்த லிங்கத்திற்குப் பின்னால் இருக்கின்றன. இது எங்குமே காணக்கிடைக்காத ஒரு அபூர்வமான தரிசனம் எனலாம். இந்த வேதாரண்யேஸ்வரர், 'திருமறைக்காடர்' என்று தமிழில் அழைக்கப்படுகிறார். திருமறை என்பது வேதம் என்பதையும் காடு என்பது ஆரண்யம் என்பதையும் குறிக்கிறது. 'திருமறைக்காடர் மணக்கோலம்' என்ற பெயர்ப்பலகை இருக்கிறது. இங்கே சிவனின் இடப்புறத்தில் பார்வதி அமர்ந்திருக்கிறார். மனிதர்களில், கணவனின் வலப்புறம்தான் மனைவிக்கு என்பது சம்பிரதாயம். ஆனால் கடவுளர்களுக்கு இது மாறுபட்டுள்ளது.

இக்கோவில், நாகப்பட்டிணம் மாவட்டத்தில் அமைந்துள்ள சப்த விடங்க தலங்களுள் ஒன்றாகும். 'சப்த விடங்க' என்பதில் 'விடங்க' என்பதற்கு உளியால் செதுக்கப்படாத என்பது பொருள். 'சப்த' என்பதற்கு ஏழு என்பது பொருள். சப்த விடங்கக் கோவில்களில் உளியால் செதுக்கப்படாத மரகதலிங்கத்திற்கு வழிபாடு நடக்கிறது.

இந்த வேதாரண்யேஸ்வரர் கோவிலில் ஒரு பாதுகாப்பான அறையில் அந்த மரகத லிங்கம் வைக்கப்பட்டுள்ளது. தினமும் காலை மாலை இரு வேளையும் பூஜை நடைபெறுகிறது. இன்று மாலை 6.20 மணிக்கு இங்கே மரகத லிங்கத்திற்கு பூஜை என்று கூறியதால் நாங்கள் சரியாக 6 மணிக்குக் கோவிலை அடைந்துவிட்டோம். ஊர் மக்களும் குழுமி இருந்தனர்.

பாதுகாப்பு அறைக்குள் இருக்கும் பாதுகாப்பான பெட்டகத்திலிருந்து லிங்கத்தை வெளியில் எடுக்கும் முன், கோவில் குருக்கள், நிர்வாகத்தார் மற்றும் பொதுமக்களுள் ஒருவர் என்று மூன்று

நபர்கள் கையெழுத்திடுகிறார்கள். மரகத லிங்கத்தை வெளியில் எடுத்து பழைய மாலை வேட்டி, சந்தனம் குங்குமம் போன்றவற்றைக் களைந்துவிட்டு அபிஷேகம் செய்து, புது வேட்டி கட்டி, சந்தனம் குங்குமம் வைத்து மாலை அணிவித்து அலங்காரம் செய்கிறார்கள். அதன் பின் தீபாராதனை காட்டி, மீண்டும் பாதுகாப்பான பெட்டகத்தில் அம் மரகத லிங்கத்தை வைத்துப் பூட்டுகிறார்கள். இந்த நிகழ்ச்சி சற்று விசித்திரமாக இருந்தது.

எல்லா சிவன் கோவில்களிலும் நவக்கிரஹங்கள் ஒன்றையொன்று நோக்காமல் வெவ்வேறு திசைகளை நோக்கியபடி இருப்பதைப் பார்த்திருக்கிறோம். இந்தக் கோவிலில் நவகிரஹங்கள் திருமறைக்காடர் திருமணக்கோலத்தைப் பார்த்தபடி ஒரே திசையை நோக்கி ஒரே நேர்க்கோட்டில் அமைந்திருப்பதும் வித்தியாசமாகவும் விசேஷமாக இருந்தது.

இந்தக் கோவில் யாழ்பாணத்தில் உள்ள ஆதீனம் ஒன்றால் நிர்வகிக்கப்படுகிறது என்றும் இங்கே எழுந்தருளியுள்ள சிந்தாமணி விநாயகர், இலங்கை யிலிருக்கும் பலருக்கும் குல தெய்வம் என்றும், அங்கே நின்றிருந்த இலங்கைத் தமிழர் எங்களுக்குக் கூறியது ஒருவித பிரமிப்பை ஏற்படுத்தியதும் உண்மை. அவர் இலங்கைத் தமிழ் உச்சரிப்பில், இக்கோவில் பற்றிய பல தகவல்களை எங்களுக்குக் கூறியதும் எங்களுக்குப் பிடித்திருந்தது.

நாகப்பட்டிணத்தில் இருந்து இலங்கைக்குக் கடல்வழிப் பயணம் இப்போது தொடங்கப்பெற்றுள்ளது. இதற்கும் இக்கோயிலுக்கும் நிறைய தொடர்பு இருப்பதாலேயே இக்கடல்வழி சாத்தியமாகியிருக்கிறது.

அகத்தியர், வசிஷ்டர், கௌதமர், விசுவாமித்திரர், நாரதர், ஸ்ரீராமர் ஆகியோர் வழிபட்ட கோவில் இது என்றும் அப்பர், சுந்தரர், திருஞானசம்மந்தர், போன்றோர் இத்தலத்தில் பாடியுள்ளனர். இக்கோவிலின் விளக்கைத் தூண்டிவிட்டு, பிரகாசமாக எரியச் செய்த எலி, அடுத்த பிறவியில், மகாபலி சக்ரவர்த்தியாகப் பிறந்தது.

இக்கோவிலில் இருக்கும் சரஸ்வதி அம்மன், கையில் வீணை இல்லாமல் இருக்கிறது. இங்கே அவள், 'யாழைப் பழித்த மொழியாள்' என்று பெயர் கொள்கிறாள். அம்பாளின் குரல் வீணை நாதத்தை விட இனிமையாக இருப்பதால், தனியாக வீணையை அவள் கையில் ஏந்தவில்லை என்பதுதான் அதற்கான காரணம் என்றும்,

இராமர் , இராவண வதம் நிகழ்த்திய பிறகு, தாம் இராவணனைக் கொன்றதால் ஏற்பட்ட பிரம்மஹத்தி தோஷம் நீங்க இங்கே லிங்கத்திற்குப் பூஜை செய்ததாகவும், அந்த இடம்தான் இக்கோவிலில் உள்ள இராமநாதர் சன்னதி என்றும் வாய்வழி செய்தி அமைந்துள்ளது.

இக்கோவில் பிரஹாரத் தூண் ஒன்றில் அணில் ஒன்றின் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. இராமருக்குப் பாலம் கட்ட உதவிய அணிலுக்கு நன்றி செலுத்தியிருக்கிறார்கள்.

இவ்வாறு இந்தச் சிற்றுலா இயற்கைச் சிறப்பும் இறைச் சிறப்பும் கொண்டு எங்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. வாருங்கள் இந்த உலாவிற்கு.

## திவ்ய தேச கவிதை தரிசனம்

# திருவழுந்தூர் என்ற தேரழுந்தூர்



**அழ. மணிமேகலை,**
காரைக்குடி

நூற்றியெட்டு, திவ்ய தேசங்களுள் இருபத்திமூன்றாவது திவ்ய தேசம், திருவழுந்தூர் என்ற தேரழுந்தூர். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது இருபத்திமூன்றாவது திவ்யதேசமாகும். இத்தலம் மாயவரத்திலிருந்து இருபத்தோரு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. மாயவரம் கும்பகோணம் சாலையில் வந்து, 'கோமல்' செல்லும் சாலையில் திரும்பிச் சென்றால் மூவலூரையடுத்துத் திருஅழுந்தூர் இருக்கின்றது.

கோகுலத்தில் கோபாலர்களுடன் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்த கண்ணன், ஒருநாள் பசுமந்தையை ஓரிடத்தில் நிறுத்திவிட்டு யமுனை நதிக்குச் சென்றிருந்தான். அப்பசுமந்தையை பிரம்மா தேரழுந்தூருக்கு ஓட்டி வந்து விட்டார். இச்செயல் அறிந்த மாயக்கண்ணன், அது போன்ற பசுமந்தையை அவ்விடத்திலேயே படைத்தான். தன் தவறை உணர்ந்த பிரம்மா, கண்ணன் முன் தோன்றி, தேரழுந்தூரில் கோயில் கொள்ள வேண்டுமென்று விண்ணப்பித்தார். அதை ஏற்ற கண்ணன், ஆ எனும் பசுக்களை மருவி, ஆநிரையை மேய்க்கும் அமரர் கோமானாக, ஆமருவியப்பனாக வந்தமர்ந்தான்.

இங்குள்ள மூலவர் – தேவாதிராஜன்; தாயார் – செங்கமலவல்லி, உற்சவர் – ஆமருவியப்பன், விமானம் – கருடவிமானம், தீர்த்தம் தர்சனபுஷ்கரணி, காவேரி, கோலம் கிழக்கு நோக்கிய நின்ற திருக்கோலம்

தேவாதிராஜன் பதிமூன்று அடி உயரத்தில், சாளக்கிராமத்தில் ஜொலிக்கின்றார். வடமொழியில் இப்பெருமானுக்கு கோசகன் என்னும் பெயருண்டு. கோசகன் என்பதன் தமிழாக்கமே ஆமருவியப்பன் ஆகும். உற்சவரான ஆமருவியப்பனுக்கு முன்புறம் கன்றும் பின்புறம் பசுவும் அமைந்துள்ள பேரழகை எழுத்தில் அடக்க இயலாது. இங்குள்ள இராஜகோபுரம் மூன்று நிலைகளை உடையது. மார்க்கண்டேயரும் இத்தலத்துப் பெருமாளைச் சேவித்து மோட்சம் பெற்றார்.

ஆமருவியப்பன் என்று இத்தலத்தின் பெருமாள் அழைக்கப்படுவதற்கு மற்றொரு கதையும் உண்டு. பெருமாளும் சிவனும் சொக்கட்டான் ஆடிக்கொண்டு இருந்தார்கள். ஆட்டத்தில், யார் காயை உருட்ட வேண்டும் என்பதில் ஒரு சின்னக்குழப்பம் வந்துவிட்டது. பார்வதிதேவி தான், ஆட்டத்தைப் பார்த்துத் தீர்ப்புக் கூறும் நடுவர். பெண்களுக்கு என்னதான் இருந்தாலும், பிறந்த வீட்டுப்

பாசம் சட்டென்று போய்விடுவதில்லை. அண்ணனாகிய பெருமாளுக்கு சாதகமாக தீர்ப்பு சொல்லிவிட்டார். அவ்வளவுதான்! சிவனுக்கு கோபம் வந்துவிட்டது. பார்வதிதேவியைப் பசுவாக மாறுமாறு சபித்துவிட்டார். பசுவாக மாறி பூலோகம் வந்த பார்வதி தேவியைத் தனியே விட மனதில்லாமல், சரஸ்வதி தேவியும், லஷ்மி தேவியும் தாங்களாகவே பசு ரூபம் எடுத்து, மூன்று பேருமாக பூமிக்கு வந்து விடுகிறார்கள். அவர்களை மேய்ப்பதற்காக, பெருமாளே ஆமருவியப்பனாக வந்து சேர்ந்தார். ஆமருவியப்பன் அழகோ கொள்ளை அழகு! இவர்கள் சொக்கட்டான் ஆடிய மண்டபம், இக்கோயிலுக்கு நேரெதிரே உள்ள சிவன் கோவிலான வேதபுரீஸ்வரர் கோவிலில் உள்ளது. பரந்தாமன் பாமாலை என்ற தொகுப்பில் கவிஞர் நா. மீனவன் இத்தலத்து மூர்த்தியை கவிநலம் பெருகும் வண்ணம் பாடி மகிழ்ந்துள்ளார். அப்பாடல்களின் பொருளும் பாடல்களும் பின்வருமாறு.

1. திருவெழுந்தூரின் சோலைகளில் பூத்துள்ள பூக்களைச் சுற்றி வந்து தேன் குடித்த மயக்கத்தில் வண்டினங்கள் பூபாள ராகத்தை இசைக்கின்றன. இங்கு உறைந்திருக்கும் தெய்வமான, பசுக்களைச் சுற்றி வந்து மேய்த்துக் கொண்டிருக்கும் ஆமருவியப்பன் எனும் கோவிந்தனின் பாதங்களை நாடி நாம் சேமங்கள் பல பெறுவோம்.

பூமருவும் வண்டினங்கள் பூபாளம் பாடிவர

ஆமருவி அப்பனாம் அரங்கன் எனும்தெய்வம்

கோமான்நல் திருவழுந்தூர் கோவிந்தன் கழல்நாடிச்

சேமங்கள் நாம்பெறவே சேரந்திங்கே வணங்குமினே.

2. தனது தவவலிமையால் விமானத்துடன் ஆகாசத்தில் சஞ்சரிக்கும் திறன் பெற்றவன் உபரிசரவசு என்னும் அரசன். தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் நேர்ந்த ஒரு விவாதத்தில், ஒருதலைப் பட்சமாக அம்மன்னன் தீர்ப்பளிக்க நேர்ந்தது. இதனால் முனிவர்கள் கோபமுற்று, இவனுடைய தேரின் நிழல், பூமியில் எங்குபட்டாலும், அவ்விடம் கருகி விடும் என்று சாபமிட்டனர்.

கண்ணன், இத்தலத்தில் முன் கூறியது போல், அம்மூன்று பசுக்களையும் மேய்த்துக் கொண்டிருந்த போது, உபரிசரவசு தேரில் வலம் வருகிறார். தேரின் நிழல் பசுக்களின் மீது பட்டதும், அப்பசுக்கள் வேதனை தாங்காமல் அலறின. சினமடைந்த கண்ணன், தரையில் விழுந்த தேரின் நிழலைத் தன் காலால் ஓங்கி அழுத்த, தேர் அப்படியே பூமியில் அழுந்தி நின்றுவிட்டது.

இவ்வாறாக, உபரிசரவசு மன்னரின் தேர் அழுந்தின இடம்தான் இந்தத் தேரழுந்தூர். பசுக்களுக்கு ஆபத்து ஏற்படுத்திய அரசனுக்கு கோஹத்தி தோஷம் உண்டா யிற்று. மன்னன் சுவாமிக்கு ஆயிரம் குடங்கள் வெண்ணை சமர்ப்பித்து முறையிட்டு, பிரார்த்தனை செய்து, கோஹத்தி சாபம் நீங்கப் பெற்றான். இந்நிகழ்வை ஒட்டி, இப்போது வருடத்தில் இரண்டு நாட்கள், தை அமாவாசை தினத்திலும், புரட்டாசி கடைசி சனிக்கிழமையும் மூலவருக்கு ஆயிரம் குடம் வெண்ணை உற்சவம் நடக்கின்றது. அத்தகைய உயர்ந்த பதியில் வாழ்கின்ற திருமாலின் சேவடிகளைப் போற்றுவோம்.

தேரோடு வான்மிசையில் திரிகின்ற திறனுடையான்

தேர்விழவே முனிவரெலாம் திரண்டங்கே சாபமிடத்

தேரழுந்திப் போனமையால் தேரழுந்தூர் என்றான

சீர்பதிவாழ் திருமாலின் சேவடிகள்

போற்றுமினே.

3. திருமங்கையாழ்வார் இத்தலத்தை நாற்பத்தைந்து பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார். அதுவும் தாயாரையும் சேர்த்து மங்களாசாசனம் செய்திருக்கிறார். திவ்யதேசக் கோயில்களில் தாயாரையும் சேர்த்துப் பாடியுள்ளது இத்திருத்தலத்தில் மட்டும்தான். நம்முடைய அஞ்ஞானத்தை வேரறுக்கும் சக்கரத்தை உடையவன், தேனைப் பருகிய வண்டினங்கள் ஒன்றுசேர்ந்து இசைபாடும் இனிய இப்பதியில், தென்னை மரங்கள் சூழ்ந்த சோலைகள் நிறைந்த தேரழுந்தூரில், செங்கமலவல்லித் தாயாருடன் சேர்ந்திருந்து அருள்பாலிக்கின்றான். அவனருளைப் பெற அவனை வணங்குவோம்

நங்கள்மல வேரறுப்பான் நயந்துறையும் சக்கரத்தான்

செங்கமல வல்லியுடன் சேர்ந்தருளும் இனியபதி

கொங்குதேர் வண்டினங்கள் கூடியே பண்மிழற்றும்

தெங்குசூழ் சோலைவளர் தேரழுந்தூர் வணங்குதுமே.

4. கவிச்சக்கரவர்த்தி கம்பன் பிறந்தது இந்த தேரழுந்தூராகும். இங்கு, கம்பர் மேடு என்ற இடமே கம்பர் வாழ்ந்த இடமாகும். கம்பருக்கும், அவர் மனைவிக்கும் இக்கோவிலில் சிலைகள் உள்ளன. இப்போது அழகான கம்பன் மண்டபமும் உள்ளது. அகத்திய மாமுனிவர் ஒரு சமயம், காவிரித் தாயை அணுகி, தன்னை மணந்து கொள்ள விண்ணப்பிக்க, காவிரி மறுக்க, இதனால் கோபமுற்ற அகத்தியர், காவிரியைக் குடத்திலடைத்தார். தரையில் இருந்த அக்குடத்தை, காகம் சாய்க்க, காவிரி வழிந்தோடியது. இதனால், மீண்டும் சினமுற்ற முனிவர், காவிரியால் வளம் பெறும் பகுதியில் உள்ளோர் அனைவரும் துன்புற்று வறுமையுறட்டும் என்று சாபமிட்டார். இச்சாபத்தைப் போக்குவதற்காக, காவிரித்தாய் இத்தலத்தில் தேவாதிராஜனைக் குறித்து தவமிருந்து, தனது சாபத்தைப் போக்கிக் கொண்டாள். இப்பெருமானை நோக்கித் தவமிருந்த நிலையில் காவிரித் தாயாரும் இச்சந்நிதியில் இடம் பெற்றுள்ளாள். கர்ப்பக்கிரகத்தில் பெருமாள் ஸ்ரீதேவி, பூதேவியோடு இல்லாமல், கருடன் பிரகாலதனோடு உள்ளார்.

தேவேந்திரன் ஒருசமயம் கருடனை அழைத்து, ஒரு வைர முடியினையும், ஒரு விமானத்தையும் தந்து, அவைகள் எந்தப் பெருமானுக்கு உகந்தவைகளோ, அவரவரிடம் சேர்ப்பிக்குமாறு வேண்டிக் கொண்டார். கருடனோ, மைசூர், திருநாராயணபுரத்தில் உள்ள செல்லப் பிள்ளை பெருமாளுக்கு வைர முடியினையும், இந்த தேவாதிராஜனுக்கு விமானத்தையும் அளித்தார். அதனால், இத்தலத்தின் விமானம் கருட விமானம் ஆயிற்று. மேலும் இப்பெருமான் கருடனைத் தன் பக்கத்திலேயே அமர்த்திக் கொண்டார். மற்ற தலங்களில் கருடாழ்வார் சுவாமிக்கு எதிரே இருப்பார்.

தேவாதிராஜன், கருடனை மட்டுமல்ல, பிரகலாதனையும் தன் பக்கத்தில் அமர்த்திக் கொண்டுள்ளார். பிரகலாதன், நரசிம்ம அவதாரத்தைக் கண்டு பயந்து, பெருமானின் சாந்த சொரூபத்தைக் காட்ட வேண்டுமென்று வேண்டினார். சினம் அடங்கப்பட்ட சிங்கமாகப் பெருமாள் காட்சியருளினார். இருப்பினும், பிரகலாதனின் அச்சம் குறையாததால், ஆமருவியப்பனாக, பிரகலாதனுக்குக் காட்சி தந்தார் எம்பெருமான்.

இவ்வாறு கம்பன் பிறந்த ஊர், காவிரி தங்கும் ஊர், கும்பமுனி சாபம் குலைந்த ஊர் என்று எல்லாம் புகழப்படுகின்ற

தேரழுந்தூரில் வீற்றிருக்கும் எம்பெருமானை, இதுவரை நினைக்காமல் இருந்து விட்டாலும் பரவாயில்லை, இன்றுமுதல் நினையுங்கள்

கம்பன்எனும் புலமைக் கவியரசன் பிறந்தவூர்

இம்பர்புகழ் காவிரியாள் எழிற்புனலும் சேர்ந்தவூர்

கும்பமுனி கருடன்முதல் கும்பிட்டுச் சிறந்தவூர்

எம்பெருமான் தேரழுந்தூர் இன்றுமுதல் நினையுமினே.

5. இம்மாயக் கண்ணன், குறும்புகள் செய்வதில் தீராத விளையாட்டுப் பிள்ளையாக இருந்ததால், யசோதை கிருஷ்ணரின் இடுப்பிலே ஒரு கயிற்றைக் கட்டி, ஓர் உரலிலே அக்கயிற்றைப் பிணைத்துவிட்டு, தனது வேலைகளில் ஈடுபட்டாள். குழந்தை கண்ணன் அந்த உரலை இழுத்துக் கொண்டு, அங்கேயிருந்த இரட்டை மருதமரத்தின் இடையே உரலோடு புகுந்து, மரத்தைப் பிளந்தான். இவ்வாறு மருதமரத்தின் இடையில் சென்ற மணிவ யிற்றுத் தாம்புடையவனை, ஆழ்வார்களின் பாடல்களில் மயங்கியவனை, பூமெத்தை போன்ற பாம்புப் படுக்கையில் துயிலும் பிரானை, ஆமருவியப்பனை தினமும் போற்றுவோம்

மாமருதின் இடைசென்ற மணிவயிற்றுத் தாம்புடையான்

பாமெத்த ஆழ்வார்கள் பாடல்களில் மயங்கியவன்

பூமெத்தை போல்அரவப் பொற்பாயல் துயின்றபிரான்

ஆமருவி அப்பன்தான் அனுதினமும் போற்றுமினே.

'திருவுக்கும் திருவாகிய செல்வா' என்றுதான் திருமங்கையாழ்வார் இப்பெருமானைச் செல்லமாக அழைப்பார். துணிக்கொடிகளும், தேர் செல்லும்போது ஏற்படும் தூசியும், மங்கையர் தம் கூந்தலில் காட்டிய அகிற்புகையும் ஒன்று சேர்ந்து, மழை மேகத்தை நினைவுபடுத்தும் அழகிய வீதிகளைக் கொண்ட திருவழுந்தூர், பகலுக்கும் இரவுக்கும் தலைவனாய், பூலோகமும் விண்ணுலகும், தானே ஆகி, நிகரில்லாத சூரிய சந்திரர்களும் இருளுமாகி நின்ற ஆமருவியப்பன் நின்றருளும் திருத்தலம் ஆகும் என இத்தலத்தைப் புகழ்ந்து பாடும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல்:

பகலும் இரவும் தானேயாய்ப் பாரும் விண்ணும் தானேயாய்

நிகரில் சுடராய் இருளாகி நின்றார் நின்ற ஊர்போலும்

துகிலின் கொடியும் தேர்த்துகளும் துன்னிமாதர் கூந்தல்வாய்

அகிலின் புகையால் முகிலேய்க்கும் அணியார் வீதி அழுந்தூரே.

திருவழுந்தூர் சென்று ஆமருவியப்பன் திருத்தாள் பணிந்து போற்றுவோம்.

திருவழுந்தூர் திருத்தல பெருமையைக் காண கேட்க பின்வரும் தொடுப்பினை இயக்குக

https://youtu.be/pS_ROiOgw0U?si=V-SaEvH5ox4zKJRWG

வழங்குபவர் செல்வி அழ. மெய்யம்மை

இக்கட்டுரை திருநெல்லையின் முந்தைய இதழ் தொடர்ச்சியாக வெளிவருகிறது. இதனை எழுதியவர் காப்பியக் கவிஞரின் திருமகளார் ஆவார். உரை வழங்கியவர் கவிஞரின் பேத்தி ஆவார்.

# பெரியபுராணக் கதைக் களம்

**பகுதி – 5**

அன்பர்களே !

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாக பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாக காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

16.09.2024 அன்று ஆவணி மாத சதுர்த்தசி திதியில் அருள்மிகு சிவகாமி அம்மன் உடனுறை ஸ்ரீ ஆனந்த நடராஜ மூர்த்திக்கு மகா அபிஷேகம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

## புரட்டாசி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 17.09.2024 | பௌர்ணமி | மாலை | சிவகாமி அம்மன் வழிபாடு |
| 21.09.2024 | சங்கடஹரசதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 22.09.2024 | கார்த்திகை | மாலை | ஆறுமுகர் வழிபாடு |
| 25.09.2024 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 30.09.2024 | பிரதோஷம் | | |
| 10.10.2024 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 13.10.2024 | வளர்பிறை ஏகாதசி | மாலை | பெருமாள் வழிபாடு |
| 15.10.2024 | பிரதோஷம் | | |
| 17.10.2024 | பௌர்ணமி | மாலை | சிவகாமி அம்மன் வழிபாடு |

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

**வினா – 1**

**நம் சமயத்தில் வினை கோட்பாட்டை எப்படி நாம் உணர வேண்டும் என்பது குறித்து விளக்க வேண்டுகிறோம்**

**விளக்கம்**

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள ”கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்” சுமார் 43,000 நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

archive.org/details/@koviloor_andavar_library

INTERNET ARCHIVE · WEB · BOOKS · VIDEO · AUDIO · SOFTWARE · IMAGES · SIGN UP | LOG IN · UPLOAD · Search

ABOUT · BLOG · PROJECTS · HELP · DONATE · CONTACT · JOBS · VOLUNTEER · PEOPLE

Koviloor Andavar Library

(no description yet)

Share · Favorite

UPLOADS · LOANS · LISTS · POSTS · REVIEWS · COLLECTIONS · WEB ARCHIVES

5,049 Results

Filters

Sort by: Weekly views · Title · Date archived · Creator · Search uploads

ஸ்ரீ கோவிலூர் மடாலயம் முத்திராமுலிங்க... archived Sep 14, 2024

ஸ்ரீ குருதெரிசனமாலை archived Sep 14, 2024

ஸ்ரீகாளத்தியீசர் சமேதர் தோத்திரம் archived Sep 14, 2024

சற்குரு விளக்கம் archived Sep 14, 2024

ஸ்ரீ விடோபா சுவாமிகள் சரித்திரம் archived Sep 14, 2024

வல்லாள மகாராஜன் சரிதம் archived Sep 14, 2024

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 5049 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தில் சென்ற மாதத்தில் மட்டும் சுமார் 500 நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மிகவும் அரிதான சில நூல்கள் இப்போது பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

